# செங்காந்தள்

*அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் தமிழ் ஆய்விதழ்*

**முனைவர் மம்தா** எம்.ஏ., எம்ஃபில்., பிஎச்.டி.
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
டெல்லி பல்கலைக்கழகம்,
டெல்லி - 110007, இந்தியா.
மின்னஞ்சல்: jnu.mamta@gmail.com
**பணியிட முகப்புப் பக்கம்:**
http://www.du.ac.in/uploads/du/Faculty%20CV/Linguistics/Linguistics_Mamta.pdf

**முனைவர் த. மகேஸ்வரி** எம்.ஏ (தமிழ்)., எம்.ஏ (ஆங்கிலம்)., எம்ஃபில்., செட்., பி.லிட்., டி.ஜி.டி. பிஎச்.டி.
பாண்டியன் கல்வி அறக்கட்டளை,
விருதுநகர் – 626001.
தமிழ்நாடு, இந்தியா.
மின்னஞ்சல்: president@pandianeducationaltrust.com
**பணியிட முகப்புப் பக்கம்:**
http://pandianeducationaltrust.com/trustees.html

**பதிப்பகத்தார்:**

**பாண்டியன் கல்வி அறக்கட்டளை (TN-32-0003213)**

**மகேஸ்வரி பப்ளிசர்ஸ், (பாண்டியன் கல்வி அறக்கட்டளையின் வெளியீட்டுப் பிரிவு)**

3-350, கால்நடை மருத்துவமனை பின்புறம்,

விருதுநகர் – 626001, தமிழ்நாடு, இந்தியா.
**Mobile:** +91 8526769556
**E-mail id:** chenkaantal@pandianeducationaltrust.com

## வெளியீட்டாளர் செய்தி

### குறிக்கோள்

***செங்காந்தள்*** **(E-ISSN: 2583-0481)** அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் தமிழ் ஆய்விதழ் ஆகும். இவ்விதழ் வருடத்திற்கு இரண்டு முறை கார்த்திகை (நவம்பர்) மற்றும் வைகாசி (மே) மாதங்களில் மகேஸ்வரி பதிப்பகத்தால் (பாண்டியன் கல்வி அறக்கட்டளை) வெளியிடப்படுகிறது. மேலும், ஆராய்ச்சியை வளர்ப்பதற்காக ஆங்கில ஆய்வுகள் மற்றும் கோவில் ஆய்வுகளுக்கான இதழ்களை வெளியிடும் பணியைச் செய்து வருகிறது. இவ்விதழ் கல்வியாளர்கள் மற்றும் அறிஞர்கள் ஆராய்ச்சியை மின் வெளியீடு மூலம் ஊக்குவித்து வருகிறது. உலகமயமாக்கப்பட்ட ஆராய்ச்சிப் பணிகளை மேற்கொள்வது, அறிஞர் சமூகத்திற்கு ஆய்வு வெளியீடுகளின் மூலம் ஆராய்ச்சியில் அறிவார்ந்த நிலையை வளர்க்க உதவுகிறது. இணையத்தில் கல்வி ஆராய்ச்சியில், திறந்த நிலை அணுகல், உலகின் மேம்பாட்டிற்கு சாதகமான விளைவுகளை உருவாக்கும் என ஊக்குவித்தும் வருகிறது.

### பொறுப்புத்துறப்பு அறிக்கை

***செங்காந்தள்*** ஆராய்ச்சி நெறிமுறைகளைப் பின்பற்றி ஆராய்ச்சி செய்வதில் உறுதியாக உள்ளது. கருத்துத் திருட்டை ஒரு குற்றமாகக் கருதுகிறது. ஆய்வாளர்கள் மற்ற படைப்புகளிலிருந்து மேற்கோள்களை எவ்வாறு பயன்படுத்துவது தொடர்பாக சிறந்த கல்வி நெறிமுறைகளைக் கடைபிடிக்க அறிவுறுத்தப்படுகிறார்கள். தங்கள் படைப்பில் கருத்துத் திருட்டு தொடர்பான எந்தவித பிழைகளுக்கும் வெளியீட்டாளர் மற்றும் பதிப்பாசிரியர்கள் பொறுப்பேற்க மாட்டார்கள். உங்கள் ஆய்வுக்கட்டுரையை ஆராய்ச்சி நெறிமுறைகளைப் பின்பற்றி முறையான படைப்பாகச் சமர்பிக்கும் பொழுது ஒப்புக்கொள்ளும் படிவம் இணைந்து இருக்க வேண்டும். மேலும், வேறு எந்த ஆராய்ச்சி நோக்கத்துக்காகவும் வெளியிடப்படவில்லை என்று உறுதி அளிக்க வேண்டும். எந்தவொரு சட்ட சிக்கல்கள் மற்றும் குறைபாடுகளுக்குக் கட்டுரையாளர் மட்டுமே பொறுப்பு. சமர்ப்பிப்பு மற்றும் பிற தகவல்களுக்கு chenkaantal@pandianeducationaltrust.com ஐ தொடர்பு கொள்ளவும். வழிகாட்டுதல்களுக்கு http://pandianeducationaltrust.com/journals.html ஐப் பார்க்கவும்.

**பதிப்பகத்தார்**

### தலைமையாசிரியர் செய்தி

*செங்காந்தள்* என்பது தமிழ் சார்ந்த ஆராய்ச்சிகளை மேம்படுத்த உருவாக்கப்பட்ட மின்ஆய்விதழாகும். உலகெங்கிலும் உள்ள அறிஞர்கள் மற்றும் மாணவர்களிடம் இருந்து அவர்களின் அறிவார்ந்த கருத்துக்களால் கல்வி நிலை மற்றும் சமுதாயத்தின் நிலையை முன்னேற்ற நல்ல ஆய்வுப்படைப்புகள் வரவேற்கப்படுகின்றன. கல்வி உலகில் ஒரு பெரிய களத்தை உருவாக்க ஆராய்ச்சி தீவிரமாக இருக்க வேண்டும். ஆராய்ச்சி என்பது உண்மைகளை நிலைநிறுத்துவது, ஆதாரங்களை உறுதிப்படுத்துவது, முந்தைய படைப்புகளை மறுசீரமைப்பது மற்றும் சிக்கல்களைத் தீர்ப்பது ஆகும். கல்வி ஆராய்ச்சி மூலம் கல்விச் சீர்திருத்தங்களுக்கான நெறிமுறைகளை ஏற்படுத்தி வழங்குவதும் முறையான அணுகுமுறையை ஏற்படுத்துவதும் இவ்விதழின் மையநோக்கமாக மாறியுள்ளது. இவ்விதழின் மலர் 1 இதழ் 2ஐ ஆய்வுலகிற்கு வழங்குவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

**முனைவர் ஜெ. கவிதா**

| பொருளடக்கம் | | |
|---|---|---|
| வ.எண் | தலைப்பு | ப.எண் |


**Chenkaantal**
*A Bi-Yearly Peer-Reviewed Tamil Journal*

**Volume - 1, Issue - 2, May 2022** **E-ISSN: 2583-0481**

# The Role of *Therppaakan* (Chariot Rider) as illustrated in Thokai Anthology and *Tholkaappiyam*

**Dr.S.Kanmani Ganesan,** Principal, Head & Department of Tamil (Rtd),
Sri Kaliswari College, Sivakasi. Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-0423-3958**
**DOI: 10.5281/zenodo.6607527**
**Received** 10 March 2022; **Revised form** 09 April 2022; **Accepted** 21 April 2022; **Available online** 26 May 2022.

## Abstract

The aim of this research article is to compare the characterisation of *therppaakan*; i.e. the chariot driver in the anthologies and the specific literary policies in *Tholkaappiyam*. Though the verses in *Tholkappiyam* do not mention the instances and the matter; when and which the chariot driver will speak; there is a lyric in *Narrinai* (s.121) in the form of the direct speech of the chariot driver. This paves way for us to compare the data from both; the anthologies and *Tholkappiyam*. As a result we can infer that there were two schools of thought regarding the part played by the chariot driver in the *akam* literature. *Therppaakan* plays a vital role greater than that which is represented in *Tholkaappiyam*.

**Keywords**: Therppaakan, Characterisation, Narrinai, Kaliththokai, Words of Thozhi.

## References

1] *Agananooru - Kalitruyanai Nirai*. Kazhaga Veliyutu, Chennai, 2009.
[2] *Agananooru - Manimidaibavalam*. Kazhaga Veliyutu, Chennai, 2007.
[3] *Agananooru - Nithilakovai*. Kazhaga Veliyutu, Chennai, 2008.
[4] *Ingurunooru*. Kazhaga Veliyutu, Chennai, 2009.
[5] *Kalithogai*. Kazhaga Veliyutu, Chennai, 2007.
[6] *Kurunthogai*. Kazhaga Veliyutu, Chennai, 2007.
[7] S. V. Subramaniyan. *Tholkappiyam Thelivurai*. Manivashagar Pathibagam, Chennai, 1998.
[8] *Natrinai*. Kazhaga Veliyutu, Chennai, 2007.
[9] Ilakkuvanar, S., *Tholkaappiyam In English With Critical Studies*. M.Neelamalar educational publishers, Madras, 1998.

**Author Contribution Statement:** NIL.
**Author Acknowledgement:** NIL.
**Author Declaration:** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

மலர் - 1, இதழ் - 2, வைகாசி 2053 இ - ஐ எஸ் எஸ் எண்: 2583-0481


# தொகையிலக்கியத்திலும் தொல்காப்பியத்திலும் தேர்ப்பாகன் பெறும் இடம்


**முனைவர் ச.கண்மணி கணேசன்(ப.நி.),** முன்னாள் முதல்வர்& தமிழ்த்துறைத் தலைவர்,

ஸ்ரீகாளீஸ்வரி கல்லூரி, சிவகாசி, தமிழ்நாடு, இந்தியா.

ORCiD: https://orcid.org/0000-0002-0423-3958


**DOI: 10.5281/zenodo.6607527**



**ஆய்வுச்சாரம்**

தொகையிலக்கியம் சித்திரிக்கும் தேர்ப்பாகனின் பாத்திரப்படைப்பைத் தொல்காப்பிய அகஇலக்கியக் கொள்கைகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். தொல்காப்பிய நூற்பாக்கள் தேர்ப்பாகன் எப்போது யாரிடம் என்ன பேசுவான் என்று சொல்லவில்லை எனினும்; அகஇலக்கியத்தில் தேர்ப்பாகனது நேரடிக் கூற்றாக அமைந்த பாடல் ஒன்று உளது (நற்.121). இதனால் தொகையிலக்கியச் செய்திகளைத் தொல்காப்பிய விதிகளுடன் பொருத்திப் பார்க்க வேண்டிய தேவை எழுகிறது. அகஇலக்கியத்தில் தேர்ப்பாகன் பெறும் இடம் குறித்து அன்று வேறுபட்ட இருகொள்கைகள் நிலவியமை தெரிகிறது. தொல்காப்பிய விதிகளைத் தாண்டித் தேர்ப்பாகன் உயிர்த்துடிப்பு மிகுந்த முக்கியப் பாத்திரமாகத் தொகையிலக்கியத்தில் இடம் பெற்றுள்ளான்.



**திறவுச்சொற்கள்:** தேர்ப்பாகன், இலக்கியக் கொள்கைகள், பாத்திரப்படைப்பு, தொகையிலக்கியத்தில் தேர்ப்பாகன், *நற்றிணை*, *கலித்தொகை*, தோழியின் வாய்மொழியில் தேர்ப்பாகன்.


**முன்னுரை**

தலைவன் வேண்டுமிடம் எங்கும் அவனை அழைத்துச் செல்லும் தேர்ப்பாகன் அகப்பாடல் காட்சிகளில் நேரில் இடம்பெறுகிறான். அவனுக்குத் தொல்காப்பியம் தரும் தகுதியையும்; தொகையிலக்கியம் தரும் தகுதியையும் பொருத்திக் காண்பது இக்கட்டுரையின் நோக்கமாகும். பிற பாத்திரங்கள் தம் கூற்றில் தேர்ப்பாகனைக் குறிப்பிடும் பாடல்களும், தேர்ப்பாகனிடம் பிற பாத்திரங்கள் பேசும் பாடல்களும், தேர்ப்பாகன் பேசியதாகக் காமக்கிழத்தி கூறும் பாடலும் (கலி.71), தேர்ப்பாகன் கூற்றாகவே அமைந்துள்ள ஒரே ஒரு பாடலும் (நற்.121) தொல்காப்பிய விதிகளும் ஆய்வுப்பொருள் ஆகின்றன.

**தேர்ப்பாகனின் முழுப்பரிமாணம்**

**அறிவும் திறமையும்**

பாகனிடம் பேசும் தலைவன் அவனை நூலறிவு மிக்கவன்; வினைவல்லவன் என்றெல்லாம் சிறப்பிக்கிறான். “நூலறி வலவ கடவுமதி” (அகம்.114) எனும் அடிக்கு

உரையாசிரியர் பொருள் கூறும் போது 'பரிநூல் அறிந்தவன்' எனப் பொருள் கூறுகிறார் (அகநானூறு களிற்றியானை நிரை- ப.291). தேர்ப்பாகன் குதிரைகளைப் பற்றி நன்கு பயின்று இருந்தான் என்பது பொருளாகும். பாகனின் அறிவுமிகுதி; 'மதியுடை வலவ' (ஐங்.487; குறுந்.400) என்று அழைக்கப்படுவதால் தெரிகிறது. திறமை காரணமாகப் பாகன் 'வலவன்' ஆகிறான். 'ஏமதி வலவ தேரே' (நற்.21; அகம்.354&384) என ஏவுகிறான் தலைவன்.

**களவுக்கால நிகழ்வுகளின் காரணி**

இரவுக்குறியில் தலைவனுக்கு உதவுவதற்காகத் தன் குதிரையைத் தாற்றுக்கோலால் தூண்டுவதைத் தவிர்த்த தேர்ப்பாகனைத் தோழி விதந்து கூறுகிறாள் (நற்.78). அன்னை காவல் கொண்ட போது;

**எல்லையும் இரவும் என்னாது கல்லென**
**வலவன் ஆய்ந்த வண்பரி**
**நிலவுமணல் கொட்குமோர் தேர் உண்டு எனவே (அகம்.20)**

கவ்வை எழுந்தது என்கிறாள். பகலிலும் இரவிலும் வெள்ளிய மணற்பரப்பில் தேர்ப்பாகன் செலுத்திய குதிரையின் அரவம் பற்றி ஊரார் கமுக்கமாகப் பேசத் தொடங்கியதால் தாய் இற்செறித்தாள் என்கிறாள் தோழி.

**… வலவன் தாங்கவும்**
**நில்லாது கழிந்த கல்லென் நெடுந்தேர்…**
**ஆயம் எல்லாம் உடன் கண்டமை (குறுந்.311)**

ஊரலர் எழக் காரணம் ஆனதெனத் தோழி உரைக்கிறாள். பாகனுக்கு அடங்கா ஆரவாரத்துடன் தேர் விரைந்ததால் ஊரலர் தொடங்கியதாம். கழியைக் கடக்குங்கால் சுறாமீன் குதிரையைத் தாக்கப் போக்கு தடைப்பட்டுத் தலைமக்களிடையே நட்பு தோன்றக் காரணமானது என்பதை; "வயச்சுறா எறிந்தென வலவன் அழிப்ப" (அகம்.190) எனச் சொல்லத் தொடங்குகிறாள் தோழி. தேர்ப்பாகனின் பணியில் நேர்ந்த சிக்கல் வேறொரு குதிரையைக் கொண்டுவந்து சேர்த்த பிறகே தீரும். ஆதலால்; தலைமக்கள் காதல் வளர ஏதுவானது. பால்வயத்தான் பாகன் கருவி ஆனதைக் கூறிச் செவிலியிடம் அறத்தொடு நிற்கிறாள்.

**தலைவியின் உயிர்காப்பாளன்**

தான் மனைவியோடு சேர்ந்து வாழ வழிவகை செய்தவன் தேர்ப்பாகன் தான் என்கிறான் தலைவன். தலைவி பிரிவுத் துன்பத்தில் உயிரை விடுமுன் வீட்டிற்கு அழைத்து வந்தமையை நன்றியுடன் நினைத்துப் பேசுகிறான். நீண்ட வழிப்பாதையில் சென்றால் காலதாமதம் ஆகுமென்று பருக்கைகளை உடைய மேட்டு நிலமாகிய கரம்பையில் புதுவழி உண்டாக்கி ஓட்டி விரைவில் தன்னை மனை சேர்த்தவனை;

**முரம்புகண் உடைய ஏகிக் கரம்பைப்**
**புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்**

**இன்று தந்தனை தேரோ**

**நோயுழந்து உறைவியை நல்கலானே (குறுந்.400)**

என்று புகழ்கிறான் தலைவன்.

**தலைவன் வீட்டு விருந்தினன்**

தலைவனுக்குப் பாகனோடிருந்த உறவு. அவனை விருந்தினனாக ஏற்று உபசரிக்கும் அளவிற்கு அணுக்கமாக இருந்தது. எதிர்பார்த்ததை விட முன்கூட்டியே ஊரை வந்து சேர்ந்த பாகனை மார்புறத் தழுவி வீட்டிற்குள் விருந்தினனாக ஏற்றுச் சென்றமையை;

**இழிமின் என்ற நின் மொழி மருண்டிசினே...**

**வரைமருள் மார்பின் நளிப்பனன் முயங்கி**

**மனைக்கொண்டு புக்கனன் நெடுந்தகை**

**விருந்தேர் பெற்றனள் திருந்திழை யோளே (அகம்.384)**

என அக்கம்பக்கம் பார்த்தவரெல்லாம் கூறுகின்றனர். தகுந்த விருந்தைத் தலைவி பெற்றனள் எனச் சொல்வது நோக்கத்தக்கது. களவுக்காலத்தில் தலைவியைச் சந்திக்க வரும்போது தோழியும். 'உன் தேர்ப்பாகனோடு எம் ஊரில் இரவுப்பொழுதில் தங்கி விருந்தயர்க' என்கிறாள் (அகம்.340).

**பாங்கன் அனையன்**

காட்டைக் கடக்கும் தலைவனின் பேச்சுத்துணையாக அமைபவன் தேர்ப்பாகன் மட்டுமே ஆவான் ஆதலால்; அவனிடம் முன்னர் நிகழ்ந்தவற்றை நினைவு கூர்கிறான். மழை பெய்ததும் தவளைகளின் ஒலியால் தேரின் மணியொலியைத் தலைவி அறியவியலாது ஆதலால்; 'நீவிர் போய்த் தெரிவிப்பீர்' என்று இளையரை விடுத்தது; அவர்கள் சென்று அறிவித்தது; உடன் அவள் நீராடிப் புனைந்து கொண்டது; அந்நேரம் தான் சென்று சேர்ந்து அணைத்து மகிழ்ந்தது எனத் தேர்ப்பாகனோடு பேசுவது அவர்க்கிடையே இருந்த தோழமையைக் காட்டுகிறது (நற்.42). தலைவியிடம் தான் கொண்ட காதல்வேட்கை பற்றித் தேர்ப் பாகனிடம் வெளிப்படுத்தத் தயங்கவுமில்லை (அகம்.154). பிரிவுணர்த்திய போது தனக்கு விடைகூற இயலாது; அறிவு மயங்கிப் பூங்கொத்தைத் தளிரோடு சேர்த்துப் பிதிர்த்த மனைவி பற்றித் தயங்காமல் பகிர்ந்து கொள்ளும் அன்புறவு தலைவனுக்கும் பாகனுக்கும் இடையில் இருந்தது (நற்.106).

**தலைவன் போன்ற ஈரநெஞ்சினன்**

காட்டுவழியில் தேரைச் செலுத்தி வரும்போது தேரின் மணியொலியோ; குதிரையின் குளம்பொலியோ கேட்காத வண்ணம் செலுத்துவாயாக என்று தேர்ப்பாகனை வேண்டும் தலைவன்; மான் முதலிய அஃறிணை உயிர்களின் நடுநாள் புணர்ச்சிக்கு இடையூறு செய்யக் கூடாது என்னும் கொள்கை உடையவன் ஆதலால்; "இடிமறந்து ஏமதி வலவ" (அகம்.134)

என்கிறான். பாகனும் நெய்தல் நிலத்தில் தேரோட்டும் போது தன் தேர்ச்சக்கரத்தில் நண்டுகள் சிக்காதபடி பார்த்து ஓட்டியமை;

**ஆழி மருங்கின் அலவன் ஓம்பி**
**வலவன் வள்பு ஆய்ந்து ஊர (நற்.11)**

எனப் புனைவு பெறுகிறது. தலைவனுக்கு ஈடான ஈரநெஞ்சம் பாகனிடமும் இருந்தது.

**செல்வாக்கு மிகுந்தவன்**

போர்க்களத்தில் வினைமுடிக்கும் தலைவனை அவன் பக்கலில் இருந்து போரிட்டோர் வழியனுப்பும் போது தேர்ப்பாகனின் திறமையைப் பேசுகின்றனர். அவரிடமும் தேர்ப்பாகன் நற்பெயர் பெற்றிருந்தான்.

**… விரியுளைக்**
**கடுநடைப் புரவி வழிவாய் ஓட**
**வலவன் வள்பு வலி உறுப்ப (அகம்.354)**

என்ற விடைகொடுக்கும் உழையோர் கூற்றில்; தலைவன் விரைவில் இல்லம் சேர்வதற்குத் தேர்ப்பாகன் திறமையே காரணம் காட்டப்படுகிறது.

**பழிக்கு ஆளாகுபவன்**

புறத்தொழுகும் தலைவனைப் பிற மகளிரிடம் தேரிலேற்றிச் செல்வதால் கோபம் கொள்ளும் தலைவி;

**வேட்டோர் திறத்து விரும்பிய நின் பாகனும்**
**நீட்டித்தாய் என்று கடாஅம் கடுந்திண்டேர் (கலி.66)**

எனத் தலைவனோடு பாகனையும் சேர்த்துச் சாடுகிறாள். 'உன் விருப்பத்திற்கு உரிய பெண்களிடம் நீ செல்வதைப் பாகனும் விரும்பியதால்; தேரை இங்கே நீண்ட நேரம் நிறுத்தாமல் கிளப்பவே ஆயத்தமாகிறான்' என்று குறைப்படுகிறாள். புறத்தொழுகும் தலைவன் பிற மகளிரோடு இன்புறத் துணைசெய்பவன் எனும் பழி தேர்ப்பாகன் மேல் விழுகிறது.

**'வள்பு'டன் தொடர்பு உடையவன்**

குதிரையை இழுத்துப் பிடிக்கும் வாருடன் கூடிய கடிவாளத்துடன் தேர்ப்பாகனை இணைத்துப் பாடியுள்ளனர். திணைமாந்தருள் கிணைப்பொருநர் 'வார்' எனப் பொருள்படும் 'வள்பு' எனும் சொல்லோடு சேர்த்துச் சொல்லப்படுவது போல் (புறம்.376, 399; அகம்.355, 372); தேர்ப் பாகனும் பல இடங்களில் 'வள்பு' எனும் வாருடன் தொடர்புறுகிறான். இதனை ஒட்டித் தலைவன் கூற்றிலும் (ஐங்.486); தோழி கூற்றிலும் (நற்.11); உழையோர் கூற்றிலும் (அகம்.354) அமையும் பாடல்கள் உள.

**தேர்ப்பாகனைக் குறித்துப் பேசுவோர்**

தலைவன், தலைவி, தோழி, உழையோர், அயலார், காமக்கிழத்தி ஆகியோர் கூற்றில் தேர்ப்பாகன் இடம்பெறுகிறான். பாகனின் திறமை அவனது கைகளில் இருக்கிறதென

நெஞ்சோடும் பேசுகிறான் தலைவன். "கைவல் பாகன் பையென இயக்க" (அகம்.230) தான் விரைந்து தலைவியைச் சேர முடிந்தது என்கிறான். திறமைமிக்க தேர்ப்பாகன் ஆகையால்; மெல்லெனச் செலுத்தியும் தன் ஆசை நிறைவேறியது எனப் பாராட்டுகிறான்.

களவுக்காலத்தில் தேருருளின் உள்வாயளவு கழிநீரில் அமுங்கினாலும்; பறவை போல விரையத்தக்க பொற்கலன் பூண்ட செருக்குடைய குதிரையைத் தாற்றுக்கோலால் தூண்டாத தேர்ப்பாகன்; இப்போது தலைவன் வரைந்து கொள்ள வருங்கால் மணியொலிக்கச் செலுத்துகின்ற வேறுபாட்டை;

**வள்வாய் ஆழி உள்வாய் தோயினும்**

**புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா**

**வலவன் கோலுற அறியா**

**உரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக் குரலே (நற்.78)**

என்று தோழி விவரிக்கிறாள். தெருவில் விளையாடிய மகன் தந்தையின் தேரைக் கண்டவுடன் அழ; பரத்தையோடு புதுமணம் புரியச் சென்ற தலைவன் போக்கொழிந்து; 'நிறுத்து பாகனே' எனத் தேரை நிறுத்தி; மகனோடு வீட்டிற்குள் நுழைந்து புதுமணம் தவிர்த்ததைத் தலைவி மகிழ்ந்து பேசுகிறாள் (அகம்.66). உழையோர் கூற்றிலும் தேர்ப்பாகன் 'வலவன்' எனத் திறமை பற்றிப் போற்றப்படுவதை முன்னர்க் கண்டோம் (அகம்.354). அயலார் தேர்ப்பாகனை விருந்தினனாகத் தலைவனின் இல்லம் புகும் பெற்றிமைக்கு ஏற்றவன் எனக் கூறியதையும் முன்னர்க் கண்டோம் (அகம்.384).

தலைவன் எந்தப் பெண்ணைத் தேடிச் சென்றான் என அறியச் சேரிதோறும் சென்று வினவும் காமக்கிழத்தி; "தேரோடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ" (கலி.68) என்றே மனக்குறையை வெளிப்படுத்துகிறாள். தலைவன் மணம்புரியும் மனையெனக் கருதிக் காமக்கிழத்தி மனையில் புகுந்து 'பொலிக' என்று ஆரவாரித்தான் தேர்ப்பாகன். புலைத் தொழிலை உடைய பாணனைக் குறை கூறுவோமா; அன்றி பாகனைக் குறை கூறுவோமா என்று அங்கலாய்க்கிறாள் அவள். தேரைத் தொட்டுச் சூளுற்றுத் தேர்ப்பாகன் பரத்தையரைக் கொண்டுவந்து விட்டதாகக் கூறும்போது; பாகன் வாய்திறந்து சூளுரைத்ததால் அவன் பேசக்கூடிய பாத்திரம் ஆகிறான். "தேரொடும் தேற்றிய பாகன் வந்து ஈயான்கொல்" (கலி.71) என்பது காமக்கிழத்தியின் அங்கதப் பேச்சு.

**தேர்ப்பாகன் பற்றித் தொல்காப்பியம்**

வினைமுடித்து மீளும்போது பாகனைத் தலைவன் விரைந்து செல்லச் சொல்வான் என்பதை;

**... முடிந்த காலத்துப்**

**பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும் (அகத்திணையியல் நூ.41)**

என்கிறது தொல்காப்பியம். இதனை 'on addressing the driver of the chariot when the war ends' என்றே முனைவர் S.இலக்குவனார் மொழிபெயர்க்கிறார் (Tholkaappiyam In English With Critical Studies- p.160).

காலம் கருதித் தன் மனைவியைச் சேர நினைக்கும் தலைவன் "செல்க பாக நின் செய்வினை நெடுந்தேர்" (நற்.221) என்று துரிதப்படுத்துகிறான். தேரோட்டியை விரையச் சொல்கிறான் (ஐங்.482-487; குறு.250; அகம்.204, 224, 244). தூங்கிக் கொண்டிருக்கும் புதல்வன் அருகில் இருந்து. தன்னைப் பார்த்து மகன் அழைப்பதைப் போல 'வந்தீக எந்தை' என்று குரல் கொடுக்கும் மனைவியின் அழகை ரசிக்க விரும்புவதாகக் காரணமும் கூறுகிறான். தேரின் வேகம் கண்டு இரிந்தோடிய மான் கூட்டத்தில்; குட்டியோடு களரின்கண் சென்ற பிணைமானைத் தேடும் கலைமானைப் பாகனுக்குக் காட்டித் தன் தவிப்பைக் குறிப்பாகத் தெரிவிக்கிறான் (நற்.242). ‘காற்றைப் பூட்டி ஓட்டினாயா? அல்லது குதிரைக்குப் பதிலாக உன் மனதைப் பூட்டி ஓட்டினாயா?’ எனக் கேட்டுப் பாகனைப் புகழ்ந்து; தேரை விட்டு இறங்கிய தலைவனை அகம்.384 காட்டுகிறது. "பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்" (கற்பியல் நூ.5) எனப் பெருஞ்சிறப்புடைய தேரோட்டும் பாகரிடம் தலைவன் அத்திறம் பற்றிப் பேசுவதுண்டு என்கிறது தொல்காப்பியம். நச்சினார்க்கினியர் இந்நூற்பாவிற்குச் சான்றாக்குவது முன்னர் சுட்டிய அகம்.384ம் பாடலே ஆகும் (அகம். நித்திலக்கோவை- ப.186)

தேரின் பெருமையையும் செலுத்தும் முறையையும் பாகனோடு உரைத்துச் சொல்லாடுகிறான். தேரின் உறுதி வாய்ந்த உருளை நிலத்தில் பதிந்து உருண்டு வரச் செலுத்துவாயாக என்பதை;

**வள்வாய் ஆழி உள்ளுறுபுருளக்**
**கடவுக காண்குவம் பாக (அகம்.54)**

எனும் போது பாகனின் தொழில் நுட்பத்தையும் தேரின் மேன்மையையும் அடியொட்டி அவனது பேச்சு அமைகிறது. நற்.81ல் பாகனிடம் தன் தேர், குதிரை இரண்டையும் அறிமுகம் செய்கிறான் தலைவன். 'அகன்ற நிலம் குழியும்படித் தன் கால்களால் கொட்டி நடந்து; விரைந்து ஆதி என்னும் நெறிப்படி நேராக ஓடுகின்ற குதிரையின் கொய்ம்மயிர் உடைய பிடரியில் கட்டிய மணிகள் ஒலிக்கத் தேரில் பூட்டுக' என்கிறான். தனது குதிரை மன்னனும் விரும்பத் தக்கது என்கிறான். குதிரையைச் செலுத்தும் முறை, தாற்றுக்கோலின் முள், இழுத்துப் பிடிக்கும் வாருடன் கூடிய கடிவாளம் ஆகியவற்றுடன் தேர்ப்பாகனைத் தொடர்புறுத்திப் பேசுவதையும் காண்கிறோம். “முள்ளிட்டு ஊர்மதி வலவ” (ஐங்.481) எனக் குதிரையின் வேகத்தைக் கூட்ட; ‘தாற்றுக்கோலின் நுனிமுள்ளால் தூண்டு’ எனக் கட்டளையிடுகிறான். போர் முடிந்து தேரில் ஏறிய தலைவன் சிறிது நேரத்திலேயே சற்றும் எதிர்பாராது ‘இறங்குக’ என்ற சொல் கேட்டு மருண்டு; “வள்பு ஆய்ந்து இயக்குமதி வாழியோ கையுடை வலவ” (அகம்.344) எனத் தோலாலான கடிவாளத்தை இழுத்துச் செலுத்திய அவனது கைவன்மையைப் பாராட்டுகிறான்.

"உளையணி உலகு கடப்பன்ன புள்ளியல் கலிமா" (அகம்.64) என உலகைக் கடப்பது போன்ற தன்மை உடைய குதிரை பறவை பறப்பது போல் தேரிழுப்பதைப் பற்றிப் பாகனோடு சொல்லாடுகிறான் தலைவன்.

**முரண்பாடுகள்**

தேர்ப்பாகன் எங்கெங்கு பேசுவான்? என்னென்ன பேசுவான்? என்று தொல்காப்பியர் கூறவில்லை. ஆனால்; "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே" (அகத்திணையியல் நூ.42) என விடுபட்ட பாத்திரங்களைப் பொதுவாகச் சுட்டிப் 'பேசுவர்' என்பதால் தேர்ப்பாகன் பேசும் தகுதி பெறுகிறான்.

**விதையர் கொன்ற முதையற் பூழி… … …**
**புறவிற்று அம்ம நீ நயந்தோள் ஊரே**
**எல்லி விட்டன்று வேந்து எனச் சொல்லுபு**
**பரியல் வாழ்க நின் கண்ணி காண்வர**
**விரியுளைப் பொலிந்த வீங்கு செலல் கலிமா**
**வண்பரி தயங்க வழீஇத் தண்பெயல்**
**கான்யாற்று இடுமணல் கரைபிறக் கொழிய**
**வெவ்விருந்து அயரும் மனைவி**
**மெல்லிறைப் பணைத்தோள் துயில் அமர்வோயே (நற்.121)**

என்ற ஒருசிறைப்பெரியனார் பாடல் மனைவியை எண்ணி வருந்தும் தலைவனுக்கு நம்பிக்கை கொடுக்கும் தேர்ப்பாகன் கூற்றாக அமைந்து உள்ளது. 'வேந்தன் போர்முடித்து அனுப்பத் தாமதம் ஆகிவிட்டதை எண்ணி வருந்தாதே. பரியின் வேகமும் என் திறனும் கொண்டு விரைவில் உன் இல்லம் சேர்த்திடுவேன்; உன் மனைவியோடு சேர்ந்து இன்பம் துய்ப்பாயாக' என்கிறான். தொல்காப்பிய விதி இன்றியும் தோழியும் உழையோரும் பாகன், தேர், குதிரை ஆகியவற்றின் சிறப்பைக் கூறுகின்றனர். பாகனை 'மதியுடை வலவ' என்றழைத்துப்; புரவிநூல் கூறும் இலக்கணப்படி பிறந்த; நீல உத்தியுடன் அடர்ந்த மயிர் பொருந்திய பிடரி, தினைக்கதிர் போல் வளைந்த தலை ஆகியவை உடைய நான்கு குதிரைகளை நுகத்தில் பூட்டி; அவற்றின் பருத்த கழுத்தில் புள்ளிகளை உடைய வடங்களை நெருக்கி அணிந்து; அவை வரிசையாக இயைந்து; பள்ளம் நோக்கிப் பாயும் வெள்ளம் போல் இழுத்துச் செல்லும் தேரைப் பாகன் ஓட்டிய தன்மை தோழி கூற்றிலும் காட்சிப்படுகிறது (அகம்.400). “வலவன் வள்புவலித்து ஊரின் அல்லது முள்ளுறின்” (அகம்.104) என குதிரையின் கடிவாளத்தை இழுத்துப் பிடித்தோ அல்லது முள்முனை உடைய தாற்றுக்கோலால் அடித்தோ செலுத்துவது பற்றித் தோழியும் கூறுகிறாள். பாகன் களவுக் காலத்தில் எவ்வாறு தேரோட்டினான்; பெண்கேட்க வரும்போது எவ்வாறு தேரோட்டினான் என்பதைத் தோழி வேறுபடுத்திக் காட்டுவதாக நற்.78 அமைகிறது. பால்வயத்தான் தலைமக்கள் இடையே காதல் தோன்றவும்; களவுக்காலத்துக் கவ்வைக்கும்;

அலருக்கும் தேர்ப்பாகன் ஓட்டிய தேரும் குதிரையும் காரணம் காட்டப்பட்டமையையும்; இரவுக் குறிக்குத் தேர்ப்பாகன் துணை நிற்பதையும் ஏற்கெனவே இக்கட்டுரையின் முற்பகுதியில் கண்டோம் (பார்க்க: தேர்ப்பாகனின் பரிமாணங்கள்). உழையோரும் தேர்ப்பாகனின் திறமை, விரைவு பற்றிப் பேசுகின்றனர் (அகம்.354&384).

**முடிவுரை**

தொல்காப்பியம் தலைவனை மட்டுமே தேர்ப்பாகன் பற்றிப் பேசக்கூடியவனாகக் குறிப்பிடினும்; தோழியும் உழையோரும் கூடத் தேர்ப்பாகனின் அறிவையும் திறனையும் பாராட்டக் காண்கிறோம். பாங்கனோடு ஒத்த சிறப்பைப் பெறுவது; தலைவன் மனையில் விருந்தினன் ஆவது; தலைமக்கள் களவுக்குத் துணை நிற்பது; பிற பல அக நிகழ்வுகளுக்குக் கருவி ஆவது; தலைவனுக்கு இணையான ஈரநெஞ்சினனாக இருப்பது எனத் தேர்ப்பாகனின் பல பரிமாணங்கள் தொகையிலக்கியத்தில் உள. கிணைப்பொருநர் போல் 'வள்பு' எனும் வாருடன் தொடர்புறுவதுடன்; பாணனைப் போல் வசையும் பெறுகிறான். எனவே அகத்திணைப் பாடுபொருள்களில் தேர்ப்பாகனின் பங்கு தொடர்பாக இருவேறு கொள்கைகள் அன்று நிலவின என முடிவு செய்ய வழி ஏற்படுகிறது. தொகையிலக்கியத்தில் கூற்று நிகழ்த்துபவனாகவும்; பேரிடம் வகிப்பவனாகவும் காணப்படும் தேர்ப்பாகன் கூற்று நிகழ்த்துவோர் வரிசையில் சேர்க்கப்படாத காரணம் மேலும் ஆய்வுக்கு உரியதாகிறது.

**துணைநூற் பட்டியல்**

[1] *அகநானூறு* - களிற்றியானை நிரை. கழக வெளியீடு, சென்னை, 2009.
[2] *அகநானூறு* - மணிமிடைபவளம். கழக வெளியீடு, சென்னை, 2007.
[3] *அகநானூறு* - நித்திலக்கோவை. கழக வெளியீடு, சென்னை, 2008.
[4] *ஐங்குறுநூறு.* கழக வெளியீடு, சென்னை, 2009.
[5] *கலித்தொகை.* கழக வெளியீடு, சென்னை, 2007.
[6] *குறுந்தொகை.* கழக வெளியீடு, சென்னை, 2007.
[7] ச.வே.சுப்பிரமணியன். *தொல்காப்பியம் தெளிவுரை.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.
[8] *நற்றிணை.* கழக வெளியீடு, சென்னை, 2007.
[9] Ilakkuvanar, S., *Tholkaappiyam In English With Critical Studies*. M.Neelamalar Educational Publishers, Madras, 1998.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை.
**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை.
**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை.




Chenkaantal
A Bi-Yearly Peer-Reviewed Tamil Journal

Volume - 1, Issue - 2, May 2022 E-ISSN: 2583-0481

# Cuisine in Poomani's Novel *Angadi*

**A.G.Kalaivani,** Research Scholar of Tamil, Alagappa University, Karaikudi, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0003-1116-6754
**Dr.M.Sutha,** Associate Professor of Tamil, Alagappa University, Karaikudi, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0002-6938-7149
**DOI: 10.5281/zenodo.6607588**
**Received** 16 March 2022; **Revised form** 15 April 2022; **Accepted** 29 April 2022; **Available online** 26 May 2022.

## Abstract

*Literature is the expression of people's way of life through language. Literature is a tool for expressing the cultural heritage and nature of a particular society. Thus, novels give us a picture of the customs of the people of the Karisal area. Among them, this article is based on Boomani's novel "Angadi" that has been recorded of the food habits of the people of the Karisal region, such as common food, cereals and their corresponding curries, meat dishes, spinach, and potatoes, in the novel "Angadi".*

**Keywords:** Boomani, Angadi, Puthinam, Unavu Vagaigal.

## References

[1] Ilankumaranar.R. *Tholkapiyam Porulathikaram*. Ilampooranam, Tamiman Pathippakam, Chennai, 2003.
[2] Rajanarayanan.K. *Karisal Kathaikal*. Annam Pathipaktam, Thanjaur, 2017.
[3] Rajanarayanan.K. *Thernthetukkappatta Kathaigal*. Annam Pathipaktam, Thanjaur, 2020.
[4] Dharman.S, *Sul.* Adayalam Pathippakam, Thiruchirappalli, 2016.
[5] Poomani, *Angadi*. Kiriya Pathippakam, Chennai, 2012.
[6] Ponneelan, *Karisal.* New Century Book House (P) Ltd, Chennai, 2019.
[7] Vishayaragavan. G. Tamil *Ilakkana Ilakkiangalil Palthurai Aaivu*. International Institute of Tamil Studies, Chennai, 2020.

**Author Contribution Statement:** NIL.
**Author Acknowledgement:** NIL.
**Author Declaration:** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

# பூமணியின் *அஞ்ஞாடி* புதினம் காட்டும் உணவு வகைகள்

**ஆ.கோ.கலைவாணி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, தமிழ்நாடு, இந்தியா.
ORCiD: https://orcid.org/0000-0003-1116-6754
**முனைவர் மு.சுதா,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, தமிழ்நாடு, இந்தியா.
ORCiD: https://orcid.org/0000-0002-6938-7149
**DOI: 10.5281/zenodo.6607588**

**ஆய்வுச்சுருக்கம்**

*மக்களின் வாழ்க்கை முறையினை மொழியின் வாயிலாக எடுத்துக்காட்டுவது இலக்கியம். குறிப்பிட்ட ஒரு சமுதாயத்தின் பண்பாட் பாரம்பரியத்தையும் இயல்புகளையும் வெளிப்படுத்தும் கருவியாக இலக்கியங்கள் அமைந்துள்ளன. அவ்வகையில் கரிசல் பகுதி மக்களின் பழக்க வழக்கங்களை புதினங்கள் நமக்கு படம் பிடித்துக் காட்டுகின்றன. அவற்றில் கரிசல் பகுதி மக்களின் உணவுப் பழக்க வழக்கங்களான பழஞ்சோற்று உணவு, தானிய உணவு மற்றும் அதற்கேற்ற குழம்பு வகைகள், இறைச்சி உணவு, கீரை, கிழங்கு போன்ற உணவு முறைகள் பற்றிய செய்திகளை பூமணி "அஞ்ஞாடி" புதினத்தில் பதிவு செய்துள்ளதனை எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.*

**திறவுச் சொற்கள்:** பூமணி, அஞ்ஞாடி, புதினம், உணவு வகைகள்.

**முன்னுரை**

உலகில் வழங்கும் ஒவ்வொரு மொழியும் தனக்கெனத் தனிச்சிறப்புகளைப் பெற்றுள்ளது. அச்சிறப்புகளை வெளிப்படுத்துவன இலக்கியங்களே. இலக்கியங்கள் காலத்தின் பிரதிபலிப்பு என்று கருதப்பெறுகின்றன. அரசியல், வாழ்வியல், கலையியல், பண்பாட்டு இயல், போன்ற மனிதன் நாகரிகத்தின் பல அடுக்குகளை இலக்கியங்கள் மூலம் அறிய இயலும். இலக்கியங்கள் மூலம் ஓர் சமூகத்தினுடைய பண்பாட்டு வரலாற்றை அறிவதற்கு உணவு வகைககளும் இன்றி அமையாத சான்றுகளாக அமைகின்றன. மக்களின் உடலை, உயிரை, உணர்வை வளர்க்கும், உணவின் வாயிலாக வெளிப்படும் பண்பாடு உணவுப் பண்பாடு எனப்படுகிறது. இதனடிப்படையில் கரிசல் நில மக்களின் உணவு, பழக்க வழக்கங்களைப் பூமணியின் அஞ்ஞாடி புதினம் வழி எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பண்பாடு**

பண்பாடு படைத்மாந்தர்கள் "மக்கட்சுட்டு" என்கிறார் தொல்காப்பியர் பண்பு என்ற சொல் குணம் என்ற சொல்லுக்கு பொருளாக அமைகிறது. பொறுமை, சீர்மை, மேன்மை,

சால்பு, அருளுள்ளம், பிறர் நலம் போற்றல் என பல பொருள்களையும் இச்சொல் குறிப்பிடுகின்றது.

1937 இல் Culture என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு எ.கே.சிதம்பரநாதர் முதலியார் பண்பாடு என்னும் சொல்லை பயன்படுத்தினார். இதனை ஆங்கில அகராதி பயிற்சி, அனுபவம் ஆகியவற்றின் மூலம் உடல் உள்ளம் மற்றும் உணர்வு ஆகியன அடையும் வளர்ச்சியே பண்பாடு என குறிப்பிடுகின்றது.

**உணவுப் பண்பாட்டு விளக்கம்**

அனைத்து உயிரினங்களும் உயிர் வாழ இன்றியமையா பொருள் உணவு ஆகும். எனவே ஒரு மனிதன் வாழும் சூழலுக்கேற்பவும், அவன் வாழும் முறைக்கு ஏற்பவும் அவனுடைய உணவுப் பழக்கமும் அமைகிறன்றது. உணவு என்பது சூழலை அடிப்படையாகக் கொண்டது என்பதாலையே தொல்காப்பியம் ஒரு நிலத்தின் கருப்பொருள் பட்டியலில் உணவை சேர்த்துள்ளது. உணவு என்பது ஈட்டல், சமைத்தல், பகிர்ந்துண்ணல் என்ற மூன்று நிலைகளில் சமூகத்தின் பண்பாட்டு செயல்பாடக விளங்குகிறது. உணவு என்பது பொருள்சார் பண்பாண்டின் ஒரு கூறு எனலாம். இது பொருள் என்பதோடு உடலியல் தேவையான உடல் நலம் ஆற்றல், உயிர் தரும் பொருள் ஆகியவற்றையும் சார்ந்தது ஆகும். இதற்கு சமூக பொருண்மைகளும், சமூக செயல்பாடுகளும் உண்டு. எனவே உணவு என்பது பண்பாட்டில் ஒரு கருத்தமைவாகச் செயல்படுகிறது.

**பழைய சோற்றுணவு**

இரவு உண்பதற்காகச் சமைக்கப்பட்ட சோற்றில் நீர் ஊற்றி வைத்து அதை காலையில் உணவாக உண்பதை பழையச் சோற்றுணவாகும். இந்த பழையச் சோற்றுணவை கரிசல் பகுதி மக்கள் விரும்பி உண்டமைக்கான செய்திகளை படைப்பாளர் ஆண்டி, மாரி என்னும் கதைமாந்தர்களைக் கொண்டு புதினத்தில் விளக்குகிறார். ஆண்டியும் மாரியும் நல்ல நண்பர்கள் இருவரும் சேர்ந்து விளையாடுவது சண்டிவீரிக்கு பிடிப்பதில்லை. எனவே மதியச் சோற்றிற்கு வீட்டிற்குச் சென்றால் அஞ்ஞை அடிப்பால் என்று பயந்து வீட்டிற்கு செல்லமுடியாது என மாரியிடம் கூறுகிறான். அதற்கு மாரி யோசித்துவிட்டு சொல்கிறான்,

**“பேசாம இருங்க. ஆருக்குந் தெரியாமக் கரச்சுக்**
**கொண்டு வந்துறெண்**
**ஆண்டிக்கு தயக்கம். இருந்தாலும் அஞ்ஞையின்**
**வாய்க்கு இது தாவலை.**
**மாரி வீட்டுக்கு ஓடிக் கலயம் நிறையக கஞ்சியும்**
**கடித்துக்கொள்ள வெங்காயமும் கொண்டுவந்தான்**
**ஆண்டி வளைத்துத் தீட்டினான். வாய்க்குள் மிச்சப்**
**பருக்கைகள் பல ருசி காட்டின” (அஞ்.ப.16)**

என்ற வரிகள் வழி மதிய உணவுக்கு வீட்டிற்குச் சென்றால் அஞ்ஞை திட்டுவாள் என்று பயப்படும் ஆண்டி மாரியிடம் தன் நிலையை கூறுகிறான். மாரி தனது வீட்டில் இருந்து யாருக்கும் தெரியாமல் கலயம் நிறைய கஞ்சியையும் அதற்குக் கடித்துக் கொள்ள வெங்காயமும் கொண்டு வந்து கொடுக்கிறான். ஆனால் ஆண்டி சமூகக் கட்டுப்பாட்டிற்குத் தயங்குகிறான். இருந்தும் அம்மாவின் திட்டுக்கு இவன் கொடுத்த கஞ்சியே தேவலை என நினைத்து குடிக்கிறான். அந்த பருக்கைகள் ஆண்டியின் வாய்க்குள் பல ருசிகளை காட்டுகிறது. மேலும்,

> **“கம்மங்கஞ்சி சோளக்கஞ்சி கேப்பைக்கூழ் மூணும் பருக்கையில்லாமல் கரைத்துத் திட்டமாக உப்புப்போட்டுக் கலக்கணும். கடித்துக்கொள்ள முறுகச் சுட்ட கருவாடு இருந்தால் ரொம்ப நல்லது கலயத்தைக் காலியாக்கிவிட்டு கம்மாய்க்குப் போய் நீர் வாகையில் மண்டிபோட்டுத் தண்ணீர் குடிக்கணும். வண்டல் மணத்துக்கும் அதுக்கும் சொகமான கிறக்கம் வரும்.” அஞ்.ப.41)**

என்ற கூற்றுகள் மூலம் கரிசல் பகுதி மக்கள் அரிசிவுணவு, கம்மங்கஞ்சி, சோளக் கஞ்சி, கேப்பைக் கூழ் போன்ற பழையச்சோற்றுக்கு ஏற்ற குழம்பு வகைகளை தேர்ந்தெடுத்து உண்டனர் என்பதை ஆண்டி, மாரி என்னும் கதைமாந்தர்களைக் கொண்டு படைப்பாளர் புதினத்தில் எடுத்துரைக்கிறார்.

**தானியச்சோறும் குழம்பு வகைகளும்**

கேப்பை, சோளம், கம்பு, சாமை, வரகு போன்றவைகள் சிறுதானிய வகையைச் சார்ந்தவை. இத்தகைய தானியங்களை கரிசல் பகுதி மக்கள் பக்குவப்படுத்தி சோறு சமைத்து, அந்தந்த தானியச்சோற்றுக்கு ஏற்ற குழம்பு வகைகளை சமைத்துண்டமைக்கான செய்திகள் பூமணியின் புதினங்களில் காணப்படுகிறது.

**கேழ்வரகு உணவு**

கரிசல் பகுதி மக்கள் சிறுதானியங்களுள் நன்றாக இருக்கக் கூடிய கேப்பையை மாவாக திரித்து அதில் நீர் சேர்த்து பதமாக கிண்டி கூழ்காய்ச்சி உண்டனர் என்பதை கரிசல் புதினத்தில்,

> **“என்ன செய்ய? வாத்தியாரு மாரியம்மாள் வீட்ல போயி கொஞ்சம் கேப்ப கொண்டாந்து குடுத்தாரு நம்ம வீட்டுக்குக் கொண்டு போயி திரிச்சு, கூழு காச்சி உப்பு போட்டுக் குடுத்தேன்” (கரிசல்.ப.203)**

என்று கூறுவதுபோல் பூமணியும் புதினத்தில் கேழ்வரகு உணவு பற்றிய செய்திகளை மருதன், மாடத்தி என்னும் கதைமாந்தர்களைக் கொண்டு வெளிப்படுத்துகிறார். மருதன் மழைதூவி வெறித்ததும் தோட்டத்திற்குச் செல்கிறான். அங்கு சீனிக்ககொடிகளிலும், அதன் பூக்களிலும் திரியும் புழுப்பூச்சிகளைப் பொறுக்குவதற்காகக் கொக்குகள் நிறைய இறங்கி நிரைபிடித்துத் தேடுகிறது. இதனைக் கண்ட அவன் வரப்பு நெடுகக் கண்ணி ஊன்றிப் படுத்திருக்கிறான். கொஞ்ச நேரத்தில் ஐந்து கொக்குகள் கண்ணியில் மாட்டியதும் அதனை எடுத்துக்கொண்டு நடக்கிறான். இதனைக் கண்ட மாடத்தி கேப்பை திரிப்பதற்காக விரைவதை ஆசிரியர்,

**"கொக்கு வேட்டையைப் பார்த்துக்கொண்டிருந்த**
**மாடத்தி கேப்பை திரிப்பதற்காக நேரமிருக்கவே**
**வீட்டுக்குக் கிளம்பிவிட்டாள்**
**கொக்குக் கறிக்கும் கேப்பைக் களிக்கும் ஏகப்பொருத்தம்**
**இளங்களியைக் கறிச்சாறில் புரட்டிச்**
**சுடச்சுடப் பிட்டுப் போட்டால் நாலஞ்சு உருண்ட**
**மாயமாக மறைந்து விடும் அனந்தி பிரியமாகச்**
**சாப்பிடுவாள். இதுக்காகவே மாடத்தி கேப்பையைப்**
**பத்திரப்படுத்தி வைத்திருப்பாள்" (அஞ்.ப.107)**

என்ற வரிகள் மூலம் மருதனின் கொக்கு வேட்டையை பார்த்த மாடத்தி வெளுப்புத்துறையிலிருந்து நேரமிருக்கவே கிளம்பி வீட்டிற்குச் செல்கிறாள். செல்லும் போதே மனதில் கொக்குக் கறியுடன் கேப்பைக் களியை கறிச்சாற்றில் புரட்டிச் சுடச்சுடப் பிட்டுப் போட்டால் நாலஞ்சு உருண்டை அதிகமாகச் சாப்பிடலாம். இதனை அத்தை (அனந்தி) பிரியமாகச் சாப்பிடுவாள். அவளுக்காகவே கேப்பையைப் பத்திரப்படுத்தி வைத்திருப்பதை மனத்தில் நினைத்துக் கொண்டு செல்கிறாள். எனவே கரிசல் பகுதி மக்கள் வேட்டையாடுபவர்களாகவும் குடும்ப உறவுகளுடன் ஒற்றுமையாக பாசத்துடன் வாழ்பவர்களாகவும் தானியத்தை பிற்காலத்திற்காகச் சேகரித்து வைத்திருக்கும் பண்புடையவர்களாகவும் இருந்தனர் என்பதை படைப்பாசிரியர் எடுத்துரைக்கிறார். மேலும், துப்பன் என்னும் மாந்தரைக் கொண்டு கேப்பைக் களி உணவை,

**"கேப்பைக் களியு நீ**
**கிருத்திருவம் பண்ணாத**
**கெண்ட மீனத் துள்ளவுட்டுக்**
**கேட்ருவென் நாலுருண்ட" (அஞ்.ப.141)**

என்ற செய்திகளைப் புதினத்தில் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். என்ற கூற்றின் வழி கரிசல் மக்கள் கேப்பைக் களியுடன் கெண்டை மீன் குழம்பை சேர்த்துண்டனர் என்ற செய்தியினை புதினத்தில் பதிவு செய்துள்ளார் பூமணி.

**கம்மஞ்சோறு**

தமிழகத்தின் கரிசல் பகுதிகளில் கம்மஞ்சோறு மிகவும் பிரபலம் கம்பு கால்சியம், இரும்பு, புரதம், மாவுச் சத்து நிறைந்த உணவாகும். இந்த உணவை கரிசல் நில மக்கள் உண்ட வாழ்ந்தனர் என்பதை சோ. தர்மன் 'சூல்' எனும் புதினத்தில் முத்து வீரன், சேவுகன், பெருமாள், செம்பட்டையன் ஆகிய நால்வரும் கீழ்காட்டு புஞ்சைக்கு ஏர்களுடன் சென்றனர். வேலை செய்வதற்கு முன் தங்களின் கஞ்சிக்கலையங்களை கருவேல மரத்தடியில் மண் தோன்றி ஒளித்து வைத்து விட்டு உழவடிக்குச் செல்கிறார்கள். அப்போது காக்காய் கம்மங் கஞ்சி

கலயத்தை மண்ணைக் கிளறி நாசம் பண்ணியதை, **"காணப்பயிற்றுத் துவையலும் கம்மங்கஞ்சியும் தரையில் சிதைறிக் கிடந்தன கலயத்திற்குள் கரிசல் மண் கஞ்சியோடு கலந்து போயிருந்தது" (சூல்.ப.14)** என்ற வரிகளில் கம்மஞ்சோற்றுணர்வை இப்பகுதி மக்கள் உண்டனர் என ஆசிரியர் கூறுவது போல் பொன்னீலனும் கரிசல் புதினத்தில் பெருமாள் புரத்திற்கு கண்ணப்பன் ஆசிரியராக வருகிறார். வரும் வழியில் அவ்வூர் மக்களின் கம்பந்தட்டைக் கூரைகள், ஆண்கள் அணிந்திருந்த கோவணம்த, பெண்கள் அணிந்திருந்த ஆறுமுழச் சேலை இவ்வாறு தான் கண்ட ஒவ்வொரு காட்சியும் தனக்குச் சம்பந்தம் இல்லாத அந்நிய மண்ணில் வந்த உணர்வைத் தந்தது. இருந்தும் அங்குள்ள பள்ளியின் நாற்காலியில் அமர்கையில் தண்ணீர் குடிக்காவிட்டால் தலை வெடித்து விடுவது போல் இருந்த தருணத்தில் வீரயன் கம்மங் கஞ்சிப் பாத்திரத்தைக் கொண்டு வந்து நாற்காலியில் வைப்பதை,

**"கம்மஞ் சோறே நீ**
**கள்ளத்தனம் பண்ணாத**
**கருவாட்டுக் கொழம்புவச்சுக்**
**கடத்தீருவென் வகுத்துக்குள்ள" (அஞ்.ப.141)**

என்று கம்மஞ் சோற்றை வீரய்யன், கண்ணப்பன் எனும் பாத்திரங்களைக் கொண்டு கூறுவது போல் பூமணியின் துப்பன் எனும் மாந்தரைக் கொண்டு இப்பாடலடியில் கரிசல் பகுதி மக்கள் கம்மஞ்சோற்றுக்கு ஏற்ற கருவாட்டுக் குழம்பு வைத்து ருசிபார்த்து உண்டனர் என்பதை புதினத்தில் படைப்பாளர் எடுத்துரைக்கிறார்.

**சாமை உணவு**

சாமை உணவு எல்லா வயதினருக்கும் ஏற்ற உணவாகும். வயிற்றுப்புண்ணை ஆற்றும் சக்தி, மலச்சிக்கல் வராமல் தடுக்கும் தன்மை மற்றும் ஏராளமான மருத்துவக் குணங்களைக் கொண்ட சாமை உணவை கரிசல் நில மக்கள் உண்டு ஆரோக்கியமாக இருந்தனர் என்பதை,

**"சாமச் சோறே நீ**
**தந்தரந்தான் பண்ணாத**
**மொளகு ரசம் ஊத்திக்**
**கழுகுபோல விழுங்கீருவென்" (அஞ்.ப.141)**

என்ற வரிகள் மூலம் இப்பகுதி மக்கள் சாமைச் சோறு செறிப்பதற்கு ஏதுவான மிளகு ரசம் வைத்து உண்டனர் எனும் செய்தியை ஆசிரியர் புதினத்தில் கூறுகிறார்.

**சோள உணவு**

சிறு தானியங்களில் முக்கியமானது சோளம் ஆகும். இதற்கு உலகம் முழுவதும் பலபெயர்கள் உண்டு. சொர்க்கம், கிரேட் மில்லெட், கியூனிபா கார்ன் என மேற்கு ஆப்பிரிக்காவிலும், காப்பிர்கார்ன் என தென் ஆப்பிரிக்காவிலும், டூரா என சூடானிலும், க்யோலியாங் என சீனாவிலும், மைலோ மைஸ் என இந்தியாவிலும் அழைக்கப்படுகிறது.

இத்தகைய தானியத்தைப் பற்றி படைப்பாளர் புதினத்தில் கரிசல் பகுதி விவசாய மக்கள் வசதி படைத்தவர்களாக இருந்தாலும் தானியச்சோற்றினையே அதிகம் விரும்பினர் என்பதை சுப்பா நாயக்கர் என்னும் மாந்தர் கொண்டு விளக்குகிறார்.

**“சுப்பா நாயக்கர் ஈரனோர்ச் சம்சாரி அவ்வளவு வசதி இருந்தும் நாயக்கர் நல்ல சோற்றுக்கு அழையமாட்டார். நிதமும் சோளச்சோறு வேணும். புளிக்க வைத்தக் காய்ச்சினாலும் சரி உடைத்துக் காய்ச்சினாலும் சரி மூணு வேளையும் அதுதான். கட்டிச் சோறாகவோ கரைத்தோ சாப்பிடும் நிம்மதி வேறெதிலும் கிடையாது. காய்ந்த வெள்ளாமைக்குத் தண்ணீர் பாய்ச்சியதுபோல் வயிறு குளிர்ந்து போகும்.” (அஞ்.ப.907)**

என்ற சுப்பா நாயக்கர் கூற்றின் வழி கரிசல் பகுதி மக்கள் விதவிதமான உணவுகள் இருந்தாலும் தானியச்சோற்றையே விரும்பி உண்ணும் பழக்கம் உடையவர்களாக காணப்பட்டனர் என்னும் செய்தியை அஞ்ஞாடி புதினம் வழி அறியமுடிகிறது .மேலும் , துப்பன் என்னும் கதைமாந்தரைக் கொண்டு சோளச் சோற்றினை,

**“சோளச் சோறே நீ**
**தோரணையாச் சிரிக்காத**
**வாளக் கருவாட்ட**
**வதக்கி ஒன்னத் தீட்டீருவென்” (அஞ்.ப.141)**

என்ற துப்பனின் பாடல் வழி கரிசல் பகுதி மக்கள் வாளக் கருவாட்ட வதக்கி சோளச் சோற்றுடன் ருசித்து உண்டனர் என்பதை புதினத்தில் ஆசிரியர் எடுத்துரைக்கிறார். மேலும், புழுங்கலரிசி, குதிரைவாலி, பச்சைநெல், வரகரிசி, தினையரிசி போன்றவற்றை கரிசல் நில மக்கள் சமைத்துண்டதை, **புழுங்கரிசிச் சோறே நீ பூப்போல சிரிக்காத** என்றும் **பச்சநெல்லுச் சோறே நீ பாசாங்கு பண்ணாத** என்றும் வரகின் அரிசியால் ஆக்கப்பட்ட சோற்றையும், புளிக்குழம்பையும் சமைத்து உண்டனர் என்பதை, **வரகஞ் சோறே நீ வக்கணையாப் பாக்காதே** என்றும் புதினத்தில் ஆசிரியர் எடுத்துரைக்கிறார்.

**திணைச் சோறு**

சங்ககால மக்கள் திணைச்சோறு உண்டதாக சங்க இலக்கியங்களில் குறிப்புகள் உள்ளன. “குரூஉக்க ணிறடிப் பொம்மல் பெறுகுவீர்” எனவரும் மலைபடுகடாம் பாடலடியில் வழியில் செல்லும் பாணனிடம் ஆற்றுப்படுத்தும் ஒருவன் மலைப்பக்கத்தில் உள்ள சிற்றூர்களுக்குச் சென்றால் நெய்யில் வெந்த தசைப் பொரியலோடு நிறவிய வடிவினையுடைய தினைச் சோற்றைப் பெருகுவீர் எனக் கூறுவதன் மூலம் பண்டையத் தமிழர்கள் திணைச் சோற்றை உண்டு வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகிறது. இம்மக்களைப் போல் கரிசல் நிலமக்களும் தினை அரிசிச் சோற்றை உண்டனர் என்பதை,

**“தெனையரிசிச் சோறே நீ**
**தெந்தனந்தான் பேசாதே**

**கதுவாலிசவ் சாறுவச்சுப்**

**பதமாகச் சாப்பிடுவென்" (அஞ்.ப.141)**

என்ற வரிகள் வழி கரிசல் பகுதி மக்கள் சிறுதானிய உணவுகளுக்கு ஏற்ற குழம்பு வகைகளை சமைத்துண்டனர் என்பதை புதின வழி அறியமுடிகிறது.

**இறைச்சி உணவுகள்**

கரிசல் நில மக்கள் மீன், ஆட்டுக்கறி, கோழிக்கறி ஆகியவற்றை சமைத்துண்டனர். என்பதை ஆடையில் கலியங்கலூரணி மக்கள் மீன் பிடித்து ஓய்ந்து பின் ஆண்டியும், மாரியும் ஓடையில் தப்பித்தோம் பிழைத்தோம் என்று வரும் கெளிர் மீன்களைப் பிடித்துண்டதை,

**"கெளிர் மீன்கள் உருண்டு புரண்டு வந்தன ஆண்டி**

**ஓடி ஓடிப் பிடித்து மடியில் போட்டுக் கொண்டான்**

**ஆண்டி பெரிசாக ரெண்டு மஞ்சக்கெளிப் பொறுக்கிக்**

**கொடுத்தான். மாரி அதைப் பக்குவமாக வாட்டினான்**

**குளிருக்கு மீன் மணம் சொக்கியது. மாவாகப்**

**பிட்டுத் தின்றார்கள் " (அஞ்.பக்.28-29)**

குழந்தை பிறந்த வீடுகளில் தாய்க்கு உண்பதற்கு நெத்திலிக்குழம்பு சமைத்துக் கொடுத்ததை பேறுகாலம் பார்க்க வந்த மருத்துவச்சியும் உண்டாள் என்பதை,

**"வேலம்மா பேறுகால வீடுகளில் அடிக்கடி**

**நெத்திலிக் குழம்பு சாப்பிடுவாள் அதனால் அவளுக்கு**

**நெத்திலி வேலம்மா என்ற பட்டப்பேர் வந்துவிட்டது" (அஞ்.ப.934)**

என்று கூறுவதன் மூலம் மீனை உயிருடனும் காயவைத்தும் சமைத்துண்டனர் என்பது பற்றிய செய்திகைளை படைப்பாசிரியர் பதிவு செய்துள்ளார்.

**ஆட்டிறைச்சி**

பொட்டல் பட்டியில் வேலையாக நாடார் காலத்திலிருந்த அய்யனாரைக் குலதெய்வமாகக் கும்பிட்டு வந்தனர். அத்தெய்வத்திற்கு வருடம் தவறாமல் சென்று கெடா வெட்டி வழிபாடு செய்து உறவினர்களுக்கு உணவளித்தனர் என்னும் செய்தியை "சந்தனநாடார்" எனும் கதாப்பாத்திரம் மூலம் விளக்குகிறார் இதனை,

**"சந்தனநாடார் தூங்கல் தொத்தலாக ரெண்டு**

**ஆட்டுக்குட்டி வாங்கிவருவார். வடிவு அவற்றைக்**

**கொழுக்க வளர்த்து விடுவாள் ரெண்டையும்**

**கசாப்புப் போட்டால் கூட்டத்துக்குச் சரியாக இருக்கும்**

**கொட்டாரத்தில் அண்டாக்களில் சமையல் நடக்கும்**

**கார வீட்டில் ரெண்டு பந்தி சாப்பிட்டு எழும்பும்" (அஞ்.ப.1010)**

என்ற வரிகள் மூலம் கரிசல் நிலமக்கள் ஆட்டிறச்சியைச் சமைத்துண்டனர் எனும் செய்திகளை அறியமுடிகிறது.

**மாப்பிளைச் சோறு**

**“மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து” (குறள்.90)**

என்கிறார் வள்ளுவர். அனிச்சம் மலரானது முகர்ந்து பார்த்தாலே வாடிப் போகும் தன்மை உடையது. இதுபோல் விருந்து படைப்போர் முகம் வேறுபட்டுக் காணப்பட்டால் விருந்திருதினர் வாடுவர் அந்த விருந்து பயனற்றுப் போகும் என்பது இதன் பொருள். எனவே நம் வீடு தேடி வருகின்ற விருந்தினர்களை, நண்பர்களை, உறவினர்களை மகிழ்வோடு இருகரம் கூப்பி வரவேற்கவேண்டும் என்கிறார் வள்ளுவர். இந்த விருந்தோம்பலை படைப்பாசிரியர் கருப்பி எனும் கதை மாந்தரைக் கொண்டு விளக்குகிறார். திருமணமாகிய பின் தாய் வீடு திரும்பும் தன் மகளுக்கும், மருமகனுக்கும் விருந்தெனப்படும் மாப்பிள்ளைச் சோறிடுவது பற்றிய செய்தியை,

**“கருப்பிபோல் கலிங்கலில் யாரும் மாப்பிள்ளைச்சோறு**
**போட்டிருக்க மாட்டார்கள் சோறு கறியில் எத்தனைவகை**
**பண்டம் பலகாரத்துக்குக் கணக்கு உண்டுமா.நாங்கல்**
**நெரித்து கோழியடித்துக் குரங்கு நட்டி. . . வாய்க்கு**
**ருசியாகச் செய்து கொடுத்தாள். பிடி கொழுக்கட்டை**
**ஓலைக் கொழுக்கட்டை பால்கொழுக்கட்டை**
**பச்சரிசிப் பணியாரம் தினை மாவு என்று தினமும்**
**செலுத்திக்கொண்டிருந்தாள்” (அஞ்.ப.158)**

என்ற வரிகள் மூலம் திருமணமாகிய பின் மாமியார் வீட்டுக்கு வரும் மருமகன் கருத்தையனுக்கும், மகள் வீரம்மாளுக்கும் கருப்பி அனைத்து வகையான கறிவகைகளையும் சமைத்து கோழி அடித்து, பிடி கொழுக்கட்டை, ஓலைக் கொழுக்கட்டை, பால்கொழுக்கட்டை, பச்சரிசிப் பணியாரம், தினைமாவு என அவர்கள் செல்லும் வரை தினமும் விதவிதமான உணவினைவிச் சமைத்துக் கொடுத்து கலிங்கலில் யாருமே செய்யாத மாப்பிள்ளைச் சோற்றுணவை கொடுத்தாள் என்ற செய்தியை ஆசிரியர் அஞ்ஞாடி புதினத்தில் பதிவுசெய்துள்ளார்.

**பிற உணவுகள்**

கரிசல் பகுதி மக்கள் கீரையை விரும்பி உண்டனர் என்பதை ‘கரிசல் கதைகள்’ எனும் நூலில் கி.ராஜநாராயணன், **“மாவைத்திரித்து களியைக் கிண்டி கீரையைக் கடைந்து வைத்தாள் தொகில் கீரை புளிபோட்டுக் கடைந்தது என்றால் கிழவிக்கு உயிர். நாயக்கருக்கும் பிடிக்கும் சூடான களியும் கீரைக் குழம்பும் தேவாமிர்தம் போல இருந்தது.” (கரிசல்.ப.164)** என்ற வரிகள்

மூலம் சுப்பா நாயக்கருக்கும் அவர் மனைவிக்கும் புளிபோட்டுக் கடைந்த தொகில் கீரை உணவு மிகவும் பிடிக்கும் என்று கூறுவது போல் பூமணியும் ‘அஞ்ஞாடி ‘புதினத்தில் கீரை உணவினை ‘வேலம்மாள்‘ எனும் கதைமாந்தரைக் கொண்டு கூறுகையில்,

> **“அவளுக்கு கீரையென்றால் உயிர். சோறே வேணாம் கீரையில்தான் எத்தனை வகை. எத்தனை ருசி தொயில் சாரணத்தி வெற்றிலைத் துடுப்பு சிறு துடுப்பு கோழிக்கீரை அங்களவாளக்கீரை முருங்கை பசலி பூசணி வெள்ளைச் சாரணத்தி அரைக்கீரை சிறுகீரை தண்டு அகத்தி புளிச்சி வெங்காயதாள் பிரண்டை எதையெதை அவித்துக் கடையனும் வதக்கனும் பொறிக்கணும் மென்று கணக்கு வைத்திருப்பாள். அகத்திக்கீரையை அவித்து நீச்சுத் தண்ணீர் ஊற்றி உப்புப் போட்டு வைத்துக் கொண்டால் ஒரு வாரத்துக்கு வரும்” (அஞ்.ப.984)**

என்ற வரிகள் வழி வேலம்மாள் கலிங்கலூரணியில் மகப்பேறுபார்க்கும் மருத்துவச்சி இவளுக்கு கீரை என்றால் உயிர் சோறே இல்லாமல் கீரையை மட்டும் அவித்துண்ணும் பழக்கம் உடையவள். இவள் கலிங்கலில் கிடைக்கும் கீரைகளான தொயில் கீரை, சாரணத்தி, வெற்றிலைத் துடுப்பு, சிறுதுடுப்பு, கோழிக்கீரை, அங்களவாளக்கீரை, தண்டு, அகத்தி, புளிச்சகீரை, பிரண்டை, இவற்றில் எந்தக் கீரையை வதக்கனும் எதைக் கடையனும் எதைப் பொறிக்கணும் என்று நன்கு தெரிந்திருப்பாள். இத்துடன் அகத்திக்கீரையை அவித்து நீச்சத்தண்ணீர் ஊற்றி உப்புப் போட்டு ஒருவாரத்திற்கு வைத்துண்பாள் என்பதனை வேலம்மாளைக் கொண்டு கரிசல் பகுதி மக்கள் கீரை வகைகளை சமைத்து உண்டனர் என்பது இதன் வாயிலாக அறியலாகிறது.

**கிழங்கு**

மழைசெய்த வன் கொடுமையால் ஊரோடு உணவின்றி இருந்தனர். ஓரளவு வசதியுள்ளவர்கள் வீட்டில் மட்டும் அடுப்பு புகைந்து கொண்டிருந்த்து. கூலி வேலை செய்யும் மக்கள் பஞ்சம் பிழைக்க கிளம்ப வேண்டும் என எண்ணினர். ஆனால் அம்மக்கள் நிலத்திலிருக்கும் சட்டிக் கிழங்கு, சானணக் கிழங்கு இவற்றை மண்வெட்டிக் கொண்டு வெட்டி எடுத்து அவற்றை உண்டு கிடைத்த நீரை குடித்து வாழ்ந்தனர் என்பதை,

> **“பூமாதேவி தனது குழந்தைகளுக் கொடுக்க என்று தன் மடியில் கிழங்கு வகைகளை வைத்துக் கொண்டிருந்தாள். மண்வெட்டிகளை எடுத்துக் கொண்டு போய் காடுகளில் புதைந்திருக்கும் சட்டிக் கிழங்கு, சானணக் கிழங்கு வகைகளைத் தோண்டிக் கொண்டு வந்து பக்குவம் செய்து தின்று கிடைத்த தண்ணீரைக் குடித்து நாட்களை எண்ணிக் கொண்டிருந்தார்கள்.” (தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள், ப.72)**

என்னும் வரியில் காணமுடிகிறது.

> **முதல் நாள் சின்னப் பயல் ஆவலில் கிழங்கெடுத்து மென்றுவிட்டான். வாய்முழுக்கச் செந்தடி அரிப்பு. அலறினான். உதடு வீங்கி விட்டது. அரிப்புக்குத் தடவ**

**எண்ணெயில்லை. ஏங்கியழுது உறங்கிவிட்டான். காக்காச்சிக்கு ராத்திரி உறக்கமில்லை. வெள்ளங்காட்டி சானணக் கொழுக்கட்டை அவித்து முதலில் சின்னவனை எழுப்பினாள்." (அஞ்ஞாடி.ப.234)**

என்ற வரிகள் மூலம் பஞ்சம் ஏற்பட்ட காலங்களில் கரிசல் பகுதி மக்கள் நிலத்தில் கிடைக்கும் கிழங்குகளை வெட்டி எடுத்து உண்டனர் என கிழங்கு உணவினைப் பற்றி படைப்பாளர் கூறுகிறார்.

***கீரை***

கரிசல் பகுதி மக்கள் கீரையை உண்டு வாழ்ந்தனர் என்பதை வேலம்மாள் எனும் கதைமாந்தரைக் கொண்டு ஆசிரியா விளக்குகிறார்.

**"அவளுக்கு கீரையென்றால் உயிர். சோறே வேணாம். கீரையில்தான் எத்தனை வகை, எத்தனை ருசி. தொயில் சாரணத்தி வெற்றிலைத் துடுப்பு சிறு துடுப்பு கோழிக்கீரை அங்களவாளக்கீரை முருங்கை பசலி பூசணி வெள்ளைச் சாரணத்தி அரைக்கீரை சிறுகீரை தண்டு அகத்தி புளிச்சி வெங்காயத்தாள் பிரண்டை... எதையெதை அவித்துக் கடையணும் வதக்கணும் பொறிக்கணும் மென்ற கணக்கு வைத்திருப்பாள். அகத்திக் கீரையை அவித்து நீச்சுத் தண்ணீர் ஊற்றி உப்புப் போட்டு வைத்துக் கொண்டால் ஒரு வாரத்திற்கு வரும்." (அஞ்ஞாடி, ப.984)**

என்ற வரிகள் வழி வேலம்மாள் கலிங்கலூரணியில் மகப்பேறு பார்க்கும் மருத்துவச்சி இவளுக்கு கீரை என்றால் உயிர். சோறே இல்லாமல் கீரையை மட்டும் அவித்துண்ணும் பழக்கத்தை உடையவள். இவள் கலிங்கலில் இயற்கையாகக் கிடைக்கும் கீரை வகைகளை எவ்வாறெல்லாம் சமைத்து உண்டாள் என்பதை ஆசிரியர் புதினத்தில் பதிவு செய்துள்ளார்.

**பழங்கள்**

சங்ககால தமிழ் மக்கள் தாம் வாழ்ந்த நிலத்தில் இயற்கையாகக் கிடைக்கும் பழங்களை உண்டனர். நெல்லிக்கனி, பலா, புளியம்பழம், மாம்பழம், காரைப்பழம், கடரிப்பழம், களாம்பழம், பிரம்பின் கனி, வாழை, விளாம்பழம், நாவற் பழம் ஆகிய பழங்களை உண்டதாக செய்திகள் காணப்படுகின்றன. இவற்றில் நாவல் பழம் பற்றி புறநானூறு,

**"கருங்கனி நாவலிலிருந்து கொய்துண்ணும்**
**பெரும்பெயராதி பிணங்களிற் குடநாட்**
**டெயினர். . ." (புறம்.177.11-13)**

என்ற பாடலில் கருமை நிறம் கொண்ட இந்த நாவற் பழத்தை பெரும்பெயர் ஆதி என்ற மனன்னின் நாட்டிலுள்ள மக்கள் மணல் குவிந்து கிடக்கும் மணல்மேட்டில் ஏறி நின்று நாவற் பழத்தை பறித்துண்டர் என்ற செய்தியை புறநானூறு கூறுவது போல் பூமணியும் அஞ்ஞாடி புதினத்தில் நாவல் பழத்தைப் பற்றி, **"பாறை நிலங்களில் பெருமூங்கில் குலைகள் காற்றில் அசைகின்றன. கரு நாவல் கனிகள் உதிர்ந்து களம் விரித்திருக்கின்றன." (அஞ்ஞாடி.ப.660)**

என்ற வரிகளில் நாவல் பழம் பற்றி விளக்குகிறார். மேலும், முக்கனிகளில் ஒன்றாக கருதப்படும் மா, பலா, வாழை இவற்றுள் மாம்பழத்தையும் பலா பழம் பற்றியும் "வழியோரம் கனிந்து தொங்கும் மாம்பழங்கள் வலிந்து அழைக்கின்றனர்" என்றும் "முற்றுப் பழுத்து வெடித்த பலாக் கனிகளும் கனிகளை விட்டுச் சிதறிய சுளைகளும் சுற்றிலும் மணம் பரப்பியுள்ளன" (அஞ்ஞாடி.ப.660) என்னும் வரிகளில் மா, பலா போன்ற பழங்களையும் கரிசல் நில மக்கள் உண்டனர் எனும் செய்தியினை அறியமுடிகிறது.

**வாழைப்பழம்**

முக்கனிகளில் ஒன்றான வாழைக் கனிக்கு தனிப்பட்ட சிறப்பும் மரியாதையும் உண்டு எனலாம். இறைவனை வழிபடவும் நல்ல காரியங்களிலும் முக்கிய இடம் பெறுகிறது. கோவம் பழம் ஏதன் பழம் கதலிப் பழம், செவ்வாழைப்பழம், ரஸ்தாளி, மலைப்பழம், கற்பூர வள்ளி என பலவகைப் பழங்கள் வழக்கத்திலுள்ளன என்பதை, பெரும்பாணாற்றுப்படையில் யானையின் கொம்பிற்கு வாழைப் பழத்தை உவமையாகக் கூறியிருப்பதையும் மக்கள் வாழைப் பழத்தை பயன்படுத்தியதையும்,

**"கவைமுலை யிரும்பிடிக் கவுன்மரு பேய்க்கும்**
**குலைமுதில் வாழைக் கனி வெண்பழம்" (பெரும்பாண்.358-9)**

என்ற பாடல் அடிகள் சுட்டுவது போல் பூமணி தம் படைப்பில் முப்பிடாதிக் கோனாரின் மாட்டு வண்டியில் சக்கரை நாடாரின் வியாபாரத்திற்கு தேவையான வாழைப் பழம், தண்டு, நார், காய், வாழை முண்டுகள் என அனைத்து பொருள்களையும் கடைக்கும் சந்தைக்கும் ஏற்றிக் கொண்டு போகும் போது வண்டிக் கூடார முகப்பில் மாட்டின் கண்ணில் படும்படி வாழைத் தாரைக் கட்டித் தொங்கவிடுவான். அதனை ஆசை தீரத் திண்ணலாம் என்ற நினைப்பிலையே வேகமாக வண்டி செல்லும் என்பதை,

> **"வண்டிக் கூடாரத்து முகப்பில் அதுக்குக் கண்ணில் படுமாறு வாழைப்பழத் தாரைக் கட்டித் தொங்க விடுவார். அந்த நினைப்பிலேயே மாடு வேகமாக ஊர் வந்து சேரும். வந்ததும் முழுத் தாரும் அதுக்குத்தான். திகட்டத்திகட்டத் தின்று முடிக்கும்." (அஞ்ஞாடி.ப.915)**

என்ற வரிகள் மூலம் மனிதர்கள் மட்டுமின்றி விலங்கினங்களும் வாழைப்பழத்தை உண்டனர் என்னும் செய்தியை பதிவு செய்துள்ளார் ஆசிரியா.

**முடிவுரை**

மண்சார்ந்த வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்த கரிசல் நிலமக்களின் உணவு முறைகள் அவர்களின் பண்பாட்டை எடுத்துரைக்கும் தன்மையுடையதாக இருந்துள்ளது. இவர்கள் பழையசோறு, சிறுதானிய உணவுகள் இவற்றிக்கேற்ற குழம்பு வகைகள் ஆகியவற்றை நன்கு சமைத்து ருசிபார்த்து உண்டனர் என்பதையும் மீன், கோழிக்கிறி,

ஆட்டுக்கறி, பறவைக்கறி, கீரைவகைகள், கிழங்கு மற்றும் பழவகைகளையும் உண்டு வாழ்ந்தனர் என்ற செய்திகளை ஆசிரியர் புதினத்தில் எடுத்தியம்பியுள்ளார்.

**துணைநின்றவை**

[1] இளங்குமரனர்.இரா. *தொல்காப்பியம் பொருளதிகாரம்.* இளம்பூரணம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2003.

[2] இராஜநாராயணன்.கி. *கரிசல் கதைகள்.* அன்னம் வெளியீடு, தஞ்சாவூர், 2017.

[3] இராஜநாராயணன்.கி. தேர்ந்தெடுத்த கதைகள். அன்னம் வெளியீடு, தஞ்சாவூர், 2020.

[4] தர்மன்.சோ. *சூல்.* அடையாளம் வெளியீடு, திருச்சி, 2016.

[5] பூமணி. *அஞ்ஞாடி.*கிரியா பதிப்பகம். சென்னை, 2012.

[6] பொன்னீலன். *கரிசல்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 2019.

[7] விசயராகவன்.கோ. *தமிழ் இலக்கண இலக்கியங்களில் பல்துறை ஆய்வு.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2020.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை.

**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை.

**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை.



**Chenkaantal**

*A Bi-Yearly Peer-Reviewed Tamil Journal*

**Volume - 1, Issue - 2, May 2022** **E-ISSN: 2583-0481**

# Psychological Thoughts in the Short Stories of S.Ramakrishnan

**M.Govindhi,** Research scholar of Tamil, Government Arts College For Women,
Krishnagiri, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-8705-3708**

**DOI: 10.5281/zenodo.6607623**

**Received** 10 March 2022; **Revised form** 09 April 2022; **Accepted** 21 April 2022; **Available online** 26 May 2022.

## Abstract

*A detailed experience of human behavior was known as psychology. Physial activities such as walking, swimming and also mental activities such as thinking, imagining, view of objectivity are all related to mental excitement. According to this, a brief of psychological mental excitement such as memories, Anger, Laughter, Sleep, Solitude, love, silence, are all placed in S.Ramakrishnan Short stories. Memories are deeply stored in the mind. Anger cause confusion, Laughter tends to forget all the sorrows, Mind search for goodness, Solitude gives happiness, Love cures all types of illness and such types of virtues and vices are portrayed through the characters in the stories of S Ramakrishnan. This study delineates see a brief psychological perspective of the chosen topic.*

**Keywords:** Ninaivu, Sinam, Siripu, Thookkam, Mounam, Thanimai, Anbu, Manam.

## References

[1] Nagarajan. *Educational Psychology*. Ram publishing, Salaigramam, Chennai-600 093.

[2] Narayana samy.R. *Thirukural*. New Century Book House, Chennai-600 098.

[3] Ramakrishnan.S. *S.Ramakrisnan Kadaikal*. Uyirmei Publishing, Salaigramam, Chennai-600 093.

[4] Ram Subramaniyam. *Thirumagal Dictionary*. V.T.Thirumagal, Chennai-17.

[5] Murugan.V. *Pals Tamil-Tamil-English*. Palaniyappa Brothers, Chennai-18.

**Author Contribution Statement:** NIL.

**Author Acknowledgement:** NIL.

**Author Declaration:** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

# எஸ்.ராமகிருஷ்ணன் சிறுகதைகளில் உளவியல் சிந்தனைகள்

**ம.கோவிந்தி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, அரசு மகளிர் கலைக்கல்லூரி,

கிருட்டினகிரி, தமிழ்நாடு, இந்தியா.

**ORCiD: https://orcid.org/0000-0002-8705-3708**

**DOI: 10.5281/zenodo.6607623**

**ஆய்வுச்சுருக்கம்**

*மனித நடத்தையின், அனுவங்களை விரிவாக கூறுவது அறிவியலே உளவியல். நடத்தல், நீந்துதல் போன்ற இயக்க செயல்களும், மனம் செயல்களான சிந்தித்தல், கற்பனை, பொருள் காணுதல் போன்ற பல செயல்களும் மனவெழுச்சி சார்ந்ததாகும். அவ்வகையில் எஸ்.ராமகிருஷ்ணன் சிறுகதையில் இடம் பெற்றுள்ள நினைவு, சினம், சிரிப்பு, தனிமை, அன்பு, தூக்கம், மௌனம் போன்ற உளவியல் தொடர்பான மனவெழுச்சிகள் குறித்த வரையறைகள் கொடுக்கப்பட்டுள்ளன. நினைவுகள் மனதில் ஆழமான பதிவுகளை உண்டாக்கும், சினம் மனக்கலக்கத்தையும், சிக்கலையும் ஏற்படுத்தும் என்பதை விளக்கப்பட்டுள்ளன. சிரிப்பு பல வித கவலைகளை மறக்க செய்யும். மனம் இனிமையைக்காணும். தனிமை தனி சுகத்தைக் கொடுக்கும். அன்பு பலவித நோய்களைப்போக்கும். இவைகள் குறித்து இக்கட்டுரை விரிவாக ஆராய்கிறது.*

**திறவுச்சொற்கள்:** நினைவு, சினம், சிரிப்பு, மௌனம், தனிமை, அன்பு, மனம், தூக்கம்

**முன்னுரை**

மனித நடத்தையை, அனுபவங்களை விவரிக்கும் அறிவியல் உளவியல் ஆகும். நடத்தை என்பது உளவியலில் விரிந்த பொருள் உடையது. உடல் இயக்க செயல்களான நடத்தல், நீந்துதல் போன்ற பல செயல்களும், உள்ள செயல்களான சிந்தித்தல், கற்பனை, பொருள் காணுதல் போன்ற செயல்களும் மனவெழுச்சி சார்ந்ததாகும். உளவியல் நோக்கில் சிந்தனை என்பது வெளியுலகச் செயல்களால் அல்லது தூண்டல்களால் நம் உள்ளத்தில் ஏற்படும் உள்ளார்ந்த தொடர்ந்து நிகழ்கின்ற மனசெயல் ஆகும். சிந்தனையில் முதலிடம் வகிப்பது உள்ளத்தில் ஏற்படும் ஆய்வு மனப்பான்மை. அவ்வகையில் எஸ்.ராமகிருஷ்ணனின் சிறுகதைகளில் நினைவு, சினம், தூக்கம், சிரிப்பு, மௌனம், தனிமை, அன்பு போன்ற மனவெழுச்சி தொடர்பான உளவியல் சிந்தனைகளை ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**நினைவு**

நினைவு என்பதற்கு எண்ணம், நோக்கம், கவனம் என்று பொருள் தந்துள்ளது திருமகள் தமிழகராதி. நாம் அனுபவித்து உணர்ந்தவைகளை மனதில் இருத்தி, பின்பு தேவைப்படும் போது அதை மீண்டும் வெளிக்கொணர்தலை நினைவு என்கிறோம். நினைவு என்பது

மறவாமல் மனதில் தோன்றும் மனதின் எண்ணங்கள் ஆகும். மன இயக்கங்களில் முக்கியமானது நினைவு. இது மன இயக்க மாறுபாடுகளில் இழப்பு நிலைக்கு வருவதுண்டு. மன இழப்பு நிலை மூவகையாகும். தன்னை மறந்த நிலை, இரட்டை வாழ்க்கை, துயில் நடை என்பர் மருத்துவர்கள். இம்மூவகைகளில் நினைவுகள் ஆராயப்படுகின்றது. சில நேரங்களில் தேவையில்லாத நினைவுகள் வரும் போது நமக்கு எரிச்சலை உண்டாக்கும். இந்த நிலையை "உறவும் பிரிவும் இன்றி" என்ற சிறுகதையில் தேவையில்லாத ஒருவனைப் பற்றி நம் மனம் எரிச்சலை உண்டாக்குகிறது என்பதை கதிரேச மச்சானைப்பற்றி நினைக்கும் போதே எரிச்சல் வர ஆரம்பித்தது. அவரும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறார் என்னும் வரிகளின் வழி நினைவு பற்றி எடுத்துரைத்துள்ளார் எஸ்.ராமகிருஷ்ணன். மேலும் நமக்கு சிறு வயதிலிருந்து நடந்த ஒரு நிகழ்வுகள் நினைவில் இருக்கும். அதாவது நம் உடலில் ஏதேனும் தழும்பு இருப்பின் அது எவ்வாறு நடந்தது என்ற நிலையில் பார்க்கும்போது அது பற்றிய நினைவு தோன்றும். இந்நினைவு "கல்யாணி இருந்த வீடு" என்ற சிறுகதையில் சேகர் என்ற பையன் தள்ளியதில் ஏற்பட்டது. பள்ளி கூடத்தின் விரிந்த பிரேயர் ஹால், போர்டு எல்லாம் அன்றைக்குப் போல் இப்போதும் நினைவில் இருந்தது என்று நினைவுப்பற்றி குறிப்பிட்டுள்ளார்.

ஒரு சில நபர்களையோ, பழகிய இடத்தையோ பிரியும் போது நினைவுகள் பிரிய மறுக்கும். பிரிந்து போகவும் வேண்டும். அதே சமயம் நினைவுகளை, விட்டுப்போக மனம் மறுக்கும். ஒரு நிலையில் ஒருவரைத்தேடி யாராவது வருவார்களோ என்ற எண்ணத்தில் தன்னை அறியாமல் முகத்தை மூடிக்கொள்வர். "போய்க்கொண்டிருப்பவர்" என்ற சிறுகதையில்

> **ஒரு நிகழ்வினை நினைத்தாலே தொண்டை அடைத்து கொள்ளும் நிலையில் அவனைத்தேடி யாராவது வரக்கூடும் என நினைத்துப் போர்வையால் முழுக்க மூடிக்கொண்டார் (எஸ்.ராமகிருஷ்ணன். போய்க்கொண்டிருப்பவர், பக்.68)**

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒருவரின் மீதிருக்கும் விருப்பமோ, வெறுப்போ அவர்களைப் பற்றிய சில நினைவுகள் மனதில் ஆழமாகப்பதிந்து விடுவதுண்டு. நம்மில் பலருக்கும் இளமைக்காலத்தில் தான் வாழ்ந்த சுற்றுச்சூழல், இயற்கை, வாழ்ந்த வாழ்க்கை, பழகிய மக்கள் என்று நினைவில் நிழலாடும். அவை மனதில் நீங்காத நினைவுகளாக இருப்பதுண்டு. இதனை "அம்மா" என்ற சிறுகதையில்,

> **அம்மா அவள் புத்தகங்கள், சாமி படங்களைக் கொண்டு வந்த பை ரயிலோடு போனது. பெஞ்சுக்கு அடியில் வைத்து விட்டு இறங்கிப் போய்விட்டார்கள். கொஞ்ச நாளுக்குப்பின் அம்மா ஒடுங்கி விட்டாள். கடைசியில் அவளிடமிருந்து பேச்சு வரவில்லை. ஜடாயுவின் சிறகு முறிந்து கிடக்கும் காட்சி அவளுக்கு, நினைவுக்கு வரும் (எஸ்.ராமகிருஷ்ணன். அம்மா, பக்.76)**

என்பதைச் சுட்டியுள்ளார் எஸ்.ராமகிருஷ்ணன். மனம் ஒரு கிடங்கு அதில் இன்ப நினைவுகளும், மகிழ்ச்சியும், புன்னகையும் அலை மோதும். அன்பிற்குரியவர்களோடு வாழ்ந்த பசுமை

நினைவுகள் எப்போதும் வந்து கொண்டே இருக்கும். தந்தை இல்லாத போது தந்தையின் நினைவு வரும் என்பதனை "நகர் நீங்கிய காலம்" என்னும் சிறுகதையில் 'கையைப்பிடித்த படி அப்பா பள்ளியில் சேர்க்கக் கூட்டிப்போன நாளின் நினைவு வந்தது' என்று கதையின் வழி அப்பாவைப்பற்றிய நினைவை எஸ்.ராமகிருஷ்ணன் எடுத்துக்காட்டியுள்ளார்.

**சினம்**

சினம் என்பது கோபம், நெருப்பு, போர், வெம்மை என்று திருமகள் தமிழகராதி பொருள் தருகிறது. சினம் மனவெழுச்சிகளில் முக்கியமானது. உடல்தேவைகள், பிறரின் தூண்டுதல், தண்டனைகள், தன்மதிப்புக்கு இடையூறு நேர்தல் போன்ற காரணங்களால் சினம் ஏற்படுகிறது. சினம் கொண்ட குழந்தைகள் பலமாக அழும். கை கால்களை உதைத்துக்கொள்ளும், கீழே விழுந்து புரளும், கீழ்ப்படிய மறுக்கும்.

சினத்தைப்பற்றி திருக்குறள் தன்னைக்காக்கச் சினத்தைக்காக்க வேண்டும் என்றும், வெகுளியை மறத்தல் வேண்டும் என்றும், சினம் நகையையும், உவகையையும் கொல்லும் என்றும், சினம் காத்தல் உள்ளியது எல்லாம் உடன் எய்தும் என்றும் கூறியுள்ளதை,

**சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி இனமென்னும்**
**ஏமப் புணையைச் சுடும் (குறள் 306)**

என்னும் குறள் வழி அறியமுடிகிறது.

சினம் பலவித நோய்களை உண்டுபண்ணும். சினத்திற்கு வெகுளாமை என்ற சொல்லும் உண்டு. அவமதிப்பு, ஏமாற்றம், இயலாமை, அதிருப்தி போன்றவற்றால் ஒருவருக்கு வரும் உணர்வு சினமாகும். சினம் அன்பை ஒழித்த நிலையில் தொடக்கத்தில் எரிச்சல் உண்டாக்கும். "காற்று மரங்கள்" என்னும் சிறுகதையில் அம்மாவின் மேல் காலை தூக்கிப் போடும் போதும், அவளை விலக்கித் தள்ளும் போதும், விரல்களைப் பிடிக்கும் போதும் அம்மாவுக்கு சினம் ஏற்படும் என்பதைக் கதையில் குறிப்பிட்டுள்ளார். இது ஒரு தீவிரமற்ற கோபமாகும். கோபம் கொஞ்ச நேரம் இருந்து பிறகு தணிந்து விடும். கடுங்கோபம் அதிதீவிரமானது, கட்டுக்கடங்காதது, வெறித்தனமானது. கொலை வெறியைத் தூண்டும் கோபமது. தீராத கோபம் தணியாத கோபமாகும். ஆணவமும், சினமும் கலந்தாகும். "வேறுபகல்" என்னும் சிறுகதையில்,

**ஒரு பெண் வெளியே பார்த்தாள், நாய் கடந்து போன இடமெங்கும் மீன் குழம்பு ஒட்டிய தடமிருந்தது. சுவரோரம் நாய் கிண்ணத்தைக் கவ்வியபடி போய்க்கொண்டிருந்தது. அவள் வெளியே கிடந்த விறகுக்கட்டையை எடுத்துக்கொண்டு ஓடினாள். நாய் கொஞ்ச தூரம் ஓடியது. மூச்சிறைக்க நின்று முறைத்தது. அவள் விறகுக் கட்டையைத் தூக்கி எறிந்தாள். நாயின் மேல் படவில்லை. இன்னும் ஆத்திரம் அதிகமானது, அவளுக்கு குனிந்து கீழே கடந்த கல்லால் அடித்தால் நாய் கத்தியபடி ஓடியது. (எஸ்.ராமகிருஷ்ணன். வேறுபகல், பக். 80)**

இதனால் சினம் கொலை வெறியைத் தூண்டும் என்பதை அறிய முடிகிறது.

சினம் தீமையானது. தேவையில்லாத மனக்கலக்கத்தையும், ஆற்றல் சிதைவையும் உண்டு பண்ணுகிறது. அடிக்கடி சினம் கொள்வது உடலுக்கு தீங்கானது சினத்தைப் போக்க பிறரிடம் பாரபட்சமின்றி நடந்து கொள்ள வேண்டும். அளவுக்கு மீறிய கட்டுப்பாடு, பிறருடன் ஒப்பிடுதல், பிறர் முன் இகழ்ந்து பேசுதல் போன்றவற்றை தவிர்த்தல் வேண்டும்.

**தூக்கம்**

தூக்கம் என்றால் புலன்கள் ஓய்ந்திருக்கும் நிலை, உறக்கம், சோர்வு, வாட்டம், சுணக்கம், தாமதம் என்று பால்ஸ் அகராதி பொருள் தருகிறது. நாம் இவ்வுலகில் நலமாக வாழ நல்ல உணவு, தூயநீர், காற்று ஆகியவை வேண்டும். அதுபோல ஆழ்ந்த உறக்கமும் வேண்டும். நாள் முழுவதும் உழைத்துக் களைத்து போகும்போது கட்டாயம் நமக்கு ஓய்வு வேண்டும். களைப்படைந்த உறுப்புகள் புத்துணர்ச்சி பெற நமக்கு தூக்கம் அவசியமாகிறது. பல்வேறு நிலைகளில் உழைக்கும் நமக்கு சில உறுப்புக்கள் உறக்கத்தின் போது, ஓய்வாக இருப்பதால் சக்தி மீட்டெடுக்கப்படுகிறது. தூங்கி எழுந்த பின் உடலும், உள்ளமும் புத்துணர்ச்சியைப் பெறுகிறது. மீண்டும் உழைக்க தயாராகின்றது. பெருமூளையின் புறணிப் பகுதியில் உறக்க மையம் அமைந்துள்ளது. நம் தசைகளுக்கும், பிற உறுப்புகளுக்கும் ஓய்வு தேவை. அது போல மூளைக்கும் ஓய்வு தேவைப்படுகிறது. இந்த ஓய்வு தூக்கத்தின் போது மட்டுமே கிடைக்கும். ஒருவருக்கு உழைத்த அலுப்பின் காரணமாகச் சோர்வு ஏற்படுகிறது. அந்நிலையில் அதற்கான தீர்வு ஓய்வு. இதனை “உறவும் பிரிவும் இன்றி” என்னும் சிறுகதையில்,

> **சாப்பாடு ஆச்சு தலகாணி குடு செத்த நேரம் சாயுறேன். காலை நீட்டிப்படுத்துக்கொண்டு சீரான குறட்டையும் விட்டார். (எஸ்.ராமகிருஷ்ணன். உறவும் பிரிவும் இன்றி, பக். 25)**

சற்று அசந்து தூங்கி விட்டார். நெற்றியில் வியர்வை துளி விடும் அளவுக்கு தூங்கி கொண்டிருந்ததாகவும் குறிப்பிட்டுள்ளார் எஸ்.ராமகிருஷ்ணன்.

“வெளியில் ஒருவன்” என்ற சிறுகதையில்,

> **வெயில் காலத்தில் புழுக்கமாக இருந்தால் குழந்தைகள் பாயில் படுத்தக்கிடந்ததாகவும், தென்னை ஓலை அசையவில்லை, வானமும் வெளுத்து போயிருந்தது. ரமணி மட்டும் பாயில் சேலைக்குள் காலை விட்டு தூங்கிக் கொண்டிருந்தாள். மேலும் அம்மாவும் ஜன்னல் ஒட்டிய பெட்டில் படுத்து தூங்கி இருந்தாள். (எஸ்.ராமகிருஷ்ணன். வெளியில் ஒருவன், பக். 32)**

என்று தூக்கத்தின் அவசியத்தை எடுத்து இயம்பியுள்ளார்.

**சிரிப்பு**

சிரிப்பு என்பது நகைப்பு குதிரையின் கனைப்பு, பகடி, ஏளனம் என திருமகள் அகராதி பொருள் தருகிறது. வாய்விட்டுச் சிரித்தால் நோய் விட்டு போகும் என்பது பழமொழி.

ஒருவருக்கு வாழ்வில் ஏற்படும் பல்வேறு கவலைகளினால் மனஅழுத்தம் ஏற்பட்டு உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி குறைகிறது. இதனால் பல்வேறு நோய்கள் ஏற்படுகின்றன. நோய்களைப் போக்கிக் கொள்ள சிரிப்பு சிறந்த மருந்தாகும். சிரிப்பதால் உடலில் உள்ள பல வித தசைகளும் இயக்கமுறுகின்றன. சிரிப்பதனால் பலவித இரசாயன மாற்றங்கள் உண்டாகின்றன. கலகலவென வாய்விட்டு சிரிப்பதால் உடலில் பலவிதமான நல்ல விளைவுகள் ஏற்படுகின்றன என்கின்றனர் மருத்துவர்கள். சிரிப்பு, அடங்காத சிரிப்பு, புன் சிரிப்பு, பட்டாசு சிரிப்பு என பல்வேறு விதமான சிரிப்புகள் உள்ளன. பெண்கள் ஒன்று சேர்ந்தால் கலகலவென சிரிப்பார்கள். இதனைப் பற்றி "உறவும், பிரிவும் இன்றி" என்ற சிறுகதையில் நிறைய பெண்கள் சிரித்துக் கொண்டிருந்தனர் என்றும், கதிரேசனை கண்டதும் சிரித்தார்கள் என்றும், எந்த களங்களும் இல்லாத சிரிப்பு, பூப்பூக்கிற மென்மை சிரிப்பு, தாங்க முடியாத சிரிப்பு மற்றும் லேசாக உதட்டைப் பிதுக்கியச் சிரிப்பு சிரித்தார்கள் என்றும் சிரிப்பு பற்றி தன் கதையின் வழி எஸ்.ராமகிருஷ்ணன் எடுத்து கூறியுள்ளார். இவ்வகையான சிரிப்புகள் இனிமையைக் கொடுத்து மகிழ்ச்சியின் அடையாளமாகவும் உள்ளக்கிளர்ச்சியை ஏற்படுத்துபவையாகவும் இச்சிரிப்புகள் சில சமயம் மௌன மொழியாகவும் விளங்குகிறது என்பதை இதனால் அறியமுடிகிறது.

உலகில் மற்ற உயிரினங்களுக்கு இல்லாத செயல்பாடு சிரிப்பு. எந்த உயிரினங்களிலும் இச்சிரிப்பைக் காண இயலாது. கள்ளம் கபடமல்லாத மனச்சிரிப்பைக் குழந்தைகளிடம் மட்டுமே காணமுடியும். இதனை "ஆறு யானைகள்" என்னும் சிறுகதையில் யானை பாகன் யானையைத் தெரு தெருவாகக் கூட்டி வரும் போது, பள்ளி போய்க் கொண்டிருக்கும் சிறுவர்களின் முன்பு தண்ணீரை உறிஞ்சி முகத்தில் அடிக்கும் என்றும், சின்னப்பிள்ளைகளின் முகத்தில் பட்டுத்தெறிக்கும் போது சிரிப்பார்கள் என்றும் சிரிப்பு பற்றி எஸ்.ராமகிருஷ்ணன் குறிப்பிட்டுள்ளார்.

சிரிப்பு மன இறுக்கத்தைத் தளர்த்துகிறது. இன்ப உணர்வை ஊட்டுகின்றது. உடல் நோய் போக்க மனதை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்ள வாய்விட்டு சிரிக்க வேண்டும். இளமையில் கள்ளம் கபடமில்லாமல் மகிழ்ச்சியும், மனநிறைவும் கொண்டு துன்பத்தை விட்டு மகிழ்ச்சியாய் மானுடம் சிரித்து மகிழ வேண்டும். திருமணத்திற்கு பின் குடும்பம், குழந்தைகள், உற்றார், உறவினர் என அனைவரும் சேர்ந்து இன்ப உணர்வு பெற சிரிக்க வேண்டும். "தெரிந்தவர்கள்" என்ற சிறுகதையில் அம்மா, அக்கா மாமா, பெரிய மாமா இன்னும் நிறைய தெரிந்தவர்களும் இருந்தார்கள். அப்போது ஒவ்வொருவரும் பார்த்துச் சிரித்தார்கள் என்றும், பதிலுக்கு அனைவரும் சிரித்தனர் என்றும் குறிப்பிட்டுள்ளார் எஸ்.ராமகிருஷ்ணன். மேலும் "போய் கொண்டிருப்பவர்கள்" என்னும் சிறுகதையில் மல்லிகாவும், சிநேகிதியும் நகைச்சுவைகளைச் சொல்லி சிரித்தனர் என்றும் குறிப்பிட்டுள்ளார். எனவே மனித குலம் நோயற்ற வாழ்வு பெற சிரிப்பு ஒரு மாமருந்தாக விளங்குகிறது என்பதை அறியமுடிகிறது.

**மௌனம்**

மௌனம் என்பது பேசாமை, அமைதி என்று பொருள். பிறரிடம் பேசி பயனில்லை என்று எண்ணும் போதும், பிறரிடம் பேசினால் சிக்கல் வரும் என்று பயந்து, பிறரிடம் பேசுவதைக் காட்டியும் பேசாமல் இருப்பது நல்லது என்று கருதும் போதும் பேச்சு இல்லாமல் இருக்கும். மேலும் கேட்ட கேள்விகளுக்கு நேரடியாகப் பதிலைச் சொல்லாமல் சுற்றி வளைத்துத் தேவையற்ற தகவல்களை எல்லாம் பேசி பின்பு பதிலைச் சொல்லுதல் போன்ற பல்வேறு விதமான குறைகளைக் காணலாம். சில சமயங்களில் மௌனமாகிப் போவதுண்டு. பேசுவதை விட பேசாத வார்த்தைகளில்லாத மௌனத்திற்கு ஆயிரமாயிரம் அர்த்தங்கள் உண்டு. தேவையின்றி பேசுபவர்களைக் காட்டிலும் பேசாது மௌனமாக இருப்பவர்களை மக்கள் விரும்புவர்.

மனித மனங்களில் மௌனம் மறைந்திருக்கும். மௌனமாக இருப்போரிடம் அறிவும், ஞாபக சக்தியும் தெளிவாக இருக்கும். வாழ்க்கையில் வரப்போகும் சிக்கல்களை முகத்தில் காட்டாது மறைக்க மௌனம் துணையாகும். மனத்தளர்ச்சி, அதிருப்தி, மனக்கொந்தளிப்பு என்பவை விறைப்பு தொடர்பான மௌன நிலையைச் சார்ந்தவையாகும். தொடக்க கால மனிதன் பேச்சுமொழி அறியாத நிலைகளில் மௌனமொழியைக் கடைப்பிடித்தான். அமைதியின் தத்துவம் மௌனம். மௌனம் இயற்கையில் எங்கும் நிறைந்துள்ளது. பேசி பேசி சக்தியை வீணாக்காமல் இருக்க இந்த மௌன மொழியே உதவுகிறது. ஞானிகள் அதிகம் விரும்புவதும் மௌனத்தையே. பேசுவதால் பயன் ஏதும் இல்லாத போது மௌனம் வெற்றி பெற்றுவிடும். “காற்று மரங்கள்” என்ற சிறுகதையில் பேச்சை நிறுத்திவிட்டு மௌனமாக அவன் மேல் சாய்ந்து கொண்டாள். பேசினால் பிரச்சனை வரும் என்று எண்ணி மௌனமாக இருந்துள்ளாள் எனக் குறிப்பிட்டுள்ளார். அதைப் போல “வெளியில் ஒருவன்” என்ற சிறுகதையிலும் கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லாமல் மௌனமாக சாப்பிட்டதாகவும், ஒருவர் மற்றொருவரை தனது இயலாமையை சொல்லிக்காட்டுகிறாளோ என்று எண்ணி மௌனமாக இருந்துள்ளாள் என்பது கதை வழி புலப்படுகிறது.

**தனிமை**

தனிமை என்பதன் பொருள் ஒன்றியாக இருக்கும் நிலை, பிரிந்து ஒதுங்கியிருத்தல், ஒப்பின்மை, உதவியற்ற நிலை, ஆதரவின்மை என்று பொருள் தருகிறது. கிரேட்ச்மர் அஸ்தெனிக் எனவும், ஷெல்டன் எக்டோமார்பிக் எனவும் வகைப்படுத்திய உடலமைப்பு உடையவர்கள் தனிமையில் விருப்பமுடையவர்களாக இருப்பர். இவர்களுக்குச் சமூக உணர்வுகள் பாதிப்புக்குள்ளாவதில்லை. சிலர் அமைதிக்காகவும், நிம்மதிக்காகவும் தனிமையை நாடுவர். தனியாகவே இருந்து மனதிற்குள் பேசி யோசித்து மௌனமாய் இருப்பது சிலருக்கு இயல்பான செயலாகிறது. மனம் தனிமையில் இன்பம் கண்டு மௌனமாய் இருக்கும். சில நேரங்களில் மனித உறவுகள் அற்று போகும்போது, தனிமை உணர்வு மேலோங்கும். ஒருசில

சம்பவங்கள் நிகழ்ந்த சோகங்களை மனதில் படரவிட்டுப் பிரிந்து போவமுண்டு. அந்நிலையில் தனிமையில் இருப்பதுண்டு. எல்லா நினைவுகளையும் அசைப்போட்டுத் தனிமையில் தஞ்சம் புகுவதுண்டு. சிலர் சொந்தங்கள், நேசித்த வீடு, உறவுகள், வாழ்ந்த இடம் இவையெல்லாம் தொலைத்து புலம் பெயர்ந்த மக்களின் தனிமைத் துயரத்தை "இடம் பெயர்தல்" என்ற சிறுகதையில் 'லேசாக பனிபடிந்த ரயில்வே ஸ்டேஷன் பெஞ்சுகளில் அலாதியான தனிமை நிறைந்து கிடந்தது. அவ்வேளையில் வீடு திரும்ப தோன்றவில்லை' என்ற தனிமை நிலையை தன் சிறுகதைகளில் ஆசிரியர் படைத்தளித்துள்ளார்.

**அன்பு**

அன்பு என்பதன் பொருள் பாசம், நேசம், பற்று, காதல், பக்தி, பரிவு என்பதாகும். அன்பு காட்டும் தாயிடம் குழந்தைக்கு முதல் பாசம் தோன்றுகிறது. குழந்தைக்கு யார் மகிழ்ச்சி தருகிறார்களோ அவர்கள் பால் அது பாசம் காட்டுகிறது. அன்பின் மகத்துவத்தை வள்ளுவர் "அன்புடைமை" என்னும் அதிகாரத்தில் எழுதியுள்ளார்.

**அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்**
**புன்கண்நீர் பூசல் தரும் (குறள் 71)**

என்னும் குறளின் வழி குறிப்பிட்டுள்ளார். மனிதர்களிடம் மட்டுமின்றி பிற உயிர்களிடத்தும் அன்பு செலுத்துதல் வேண்டும். ஒருவருக்கு தன்னலமற்ற அன்பின் வாயிலாக நோயெதிர்ப்பாற்றல் பெருகுகிறதென்பதும் அதன் வழியாக ஆயுள் அதிகரிக்கிறது என்பதும் அறிவியலாளர்கள் கண்ட உண்மையாகும். எஸ்.ராமகிருஷ்ணன் "வேறு பகல்" என்னும் சிறுகதையில் அப்பு என்பவன் நாய் இருக்கும் இடத்திற்குச் சென்று வருவதாகவும், அதில் ஒரு குட்டியை வீட்டில் வளர்ப்பதற்காக கொண்டு வந்தான் என்றும், அதற்கு பாத்திரமூடியில் பால் ஊற்றி வைத்தான் என்றும் குறிப்பிட்டுள்ளார். மேலும், அவன் வேலைகள் முடித்த பிறகு நாய் குட்டியின் கழுத்தையும், காதையும் பிடித்து கொஞ்சுவான். இதன் மூலம் விலங்குகளிடத்திலும் அன்பு செலுத்த வேண்டும் என்பதை வெளிகாட்டியுள்ளார் ஆசிரியர்.

அன்பான வார்த்தைகளும், அரவணைப்பான பேச்சும் நோய் உள்ளோர்க்கும் நோயைத் தீர்க்கும் நோயாளர்களின் மீது அன்பு செலுத்தினால் அவர்களுக்கு பாதி நோய் தீர்ந்து விடும் என்பது மருத்துவ உண்மையாகும். "வெளியில் ஒருவன்" என்னும் சிறுகதையில் அம்மா மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு இருப்பாள். மகன் அவளைக்காண செல்வான். அம்மாவை பார்ப்பான். அம்மா தூங்கிக் கொண்டிருப்பாள். அவள் மகனின் பேச்சிற்காக ஏங்கிக் கொண்டிருப்பாள். அவன் பேசியதும் அம்மாவிற்கு பாதி நோய் குறைந்துவிட்டதாக குறிப்பிட்டுள்ளார் எஸ்.ராமகிருஷ்ணன்.

**நிறைவாக**

நினைவுகள் சில மனதில் அழித்தாலும் அழியாமல் நிலைத்த தன்மை பெறும் என்பதை அறியமுடிகிறது. சினத்தைப் போக்க பாரபட்சமின்றி நடந்து கொள்ள வேண்டும். அளவுக்கு

மீறிய கட்டுப்பாடு, பிறருடன் ஒப்பிடுதல், பிறர் எதிரில் இகழ்ந்து பேசுதல் ஆகியவற்றை தவிர்த்தல் வேண்டும் என்பதை உணர முடிகிறது. நம் தசைகளுக்கும், பிற உறுப்புகளுக்கு ஓய்வு தேவை. அதுபோல் மூளைக்கும் ஓய்வு தேவை. ஓய்வு தூக்கத்தின் மட்டுமே கிடைக்கும் என்பது கதை வழி புலனாகிறது. உடல்நோய் போக்க மனதை மகிழ்ச்சியாக வைத்துக்கொள்ள வாய்விட்டு சிரிக்க நாம் கற்றுகொள்ள வேண்டும். மனதில் மௌன உணர்வு புகுந்தால் மன இறுக்கமும் உண்டாக காரணமாகி விடும் என்பதை இக்கட்டுரை உணர்த்துகிறது. அன்பைக் கொடுப்போர், பெறுவோர் இடையே மகிழ்ச்சி, மரியாதை, நன்றியுணர்வு ஆகியவை உண்டாகின்றன என்பதை இக்கட்டுரை வெளிப்படுத்துகிறது.

**துணைநூற்பட்டியல்**

[1] நாகராஜன்.கி. *கல்வி உளவியல்.* இராம் பதிப்பகம், சென்னை-600093.

[2] நாராயணசாமி.இரா. *திருக்குறள்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-600098.

[3] ராமகிருஷ்ணன்.எஸ். *எஸ்.ராமகிருஷ்ணன் கதைகள்.* உயிர்மை பதிப்பகம், சென்னை-600018.

[4] இராமசுப்பிரமணியம், வ.த. *திருமகள் தமிழகராதி.* திருமகள் நிலையம், சென்னை-600017.

[5] முருகன்.வெ. *பால்ஸ் அகராதி.* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-600 014.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை.

**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை.

**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை.


**Chenkaantal**
*A Bi-Yearly Peer-Reviewed Tamil Journal*

**Volume - 1, Issue - 2, May 2022** **E-ISSN: 2583-0481**

# Worship of Shaiva Cult in Panniru Thirumaraigal (Twelve Sacred Texts)

**Dr A.Mahalakshmi,** Assistant Professor of Tamil,
Nallamuthu Gounder Mahalingam College, Pollachi, Coimbatore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-5234-0750**
**DOI: 10.5281/zenodo.6607668**

## Abstract

*If we recite the five-letter mantra of Lord Shiva, it will give the appearance of the Lord and his appearance will expand our minds; Manikkavaskar says to live in the likeness of Lord Shiva who is with Ganga on the head, fire eye on the forehead, aravata (snake) on the neck, poison on the throat, tiger skin in the waist and Uma Devi on his left side. Twelve times the devotees of the Saiva cult keep this idea in mind and recite the mantra of Namachchivaya and recite the means of reviving oneself as best they can to attain Mukti. The gist of this article is to explain the rituals of the devotees to Lord Shiva. The title of the Twelve Apostles' Saivic rituals refers to the problems faced by the devotees in handling the Saivic rites. The hypothesis of this study is to examine the practice of the Saivic cult as found in the Twelve sacred texts. Descriptive method has been followed to study the devotion of the Nayanmars, historical critique for telling historical facts, and ecological critique for explaining the ecology are utilized in the study.*

**Keywords:** Twelve times, Veganism, Namasivayam, Worship.

## References

[1] Ilampooranar. *Tholkappiyam*. Manimegalai Prasuram, Chennai, 1981.
[2] Dr. Nallur Sa. Saravanan. *Sivagnanabootham*. Saivasiddanthap Perumandram, Channai – 2018.
[3] Rasamanikkanar. *Thiruthondar Puranam* (Thoguthi – 1), Vrthamanar Pathippagam, 1998.
[4] Rasamanikkanar. *Thiruthondar Puranam* (Thoguthi – 2), Vrthamanar Pathippagam, 1998.
[5] Pa. Arunachalam. *Saivasamayam*. Manivasakar Pathippagam, 2004.

**Author Contribution Statement:** NIL.

**Author Acknowledgement:** NIL.

**Author Declaration:** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

மலர் - 1, இதழ் - 2, வைகாசி 2053 இ - ஐ எஸ் எஸ் எண்: 2583-0481


# பன்னிரு திருமுறைகள் காட்டும் சைவ சமய வழிபாட்டு நெறிமுறைகள்


**முனைவர் ஆ.மகாலட்சுமி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி, கோவை, தமிழ்நாடு, இந்தியா.

ORCiD: https://orcid.org/0000-0001-5234-0750



**DOI: 10.5281/zenodo.6607668**


## ஆய்வுச்சுருக்கம்


*இயற்கையின் வடிவாக காட்சி அளிக்கின்ற சிவனின் ஐந்தெழுத்து மந்திரத்தை உச்சரித்தால் அவனது தோற்றம் நம் மனதில் விரியும.; தலையில் கங்கையும் நெற்றியில் வெந்நீரையும் கழுத்தில் அரவத்தையும் கண்டத்தில் நஞ்சையும் அரையில் புலித்தோலையும் இடப்பாகத்தில் உம்;மையையும் கொண்ட சிவபெருமானின் தோற்றப்பொலிவு வாழ்க என்கிறார் மாணிக்கவாசகர். இக்கருத்தை அடியார்கள் மனதில் நிறுத்தி நமச்சிவாய என்ற மந்திரத்தை கூறி தம்மால் முடிந்தவரை பிறர்நலம் காத்து தானும் உய்வும் வழிவகைகளை கூறுவதே பன்னிருதிருமுறைகளாகும். இதில் உள்ள அடியார்களில் வழிபாட்டுமுறைகளை விளக்குவதே இவ்வாய்வுக்கட்டுரையின் சுருக்கமாகும். பன்னிருதிருமுறைகள் காட்டும் சைவ சமய வழிபாட்டுநெறிமுறைகள் எனும் இத்தலைப்பில் சைவ சமய நெறிமுறைகளை அடியார்கள் கையாண்டவிதத்தில் ஏற்பட்ட சிக்கல்களை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. பன்னிருதிருமுறைகளில் சைவ சமய வழிபாட்டுநெறிமுறைகள் பின்பற்றப்படும் விதத்தை ஆய்வதே இவ்வாய்வின் கருதுகோளாகும். நாயன்மார்களின் பக்தித்திறத்தை ஆய்வதால் விளக்குமுறை திறனாய்வும் வரலாற்று முறைகளை கூறுவதால் வரலாற்றுமுறைத் திறனாய்வும் சூழலியலை விளக்குவதால் சூழலியல் திறனாய்வும் பின்பற்றப்பட்டுள்ளன.*



**திறவுச்சொற்கள்:** பன்னிருதிருமுறைகள், சைவம், நமச்சிவாயம், வழிபாட்டு முறைகள்.


## முன்னுரை

எல்லாப்பொருள்களிலும் ஊடுருவி நிற்கும் பரம்பொருளையே சிவன் எனக் கூறுகிறோம். அப்பரம்பொருள் நம்மோடு தொடர்புகொள்ள எடுத்துக்கொண்ட திருக்கோலமும் அத்திருக்கோலத்தைக் குறிக்கும் திருநாமமும் இங்கு சிவன் எனக் குறித்தற்குக் காரணமாகும். இத்திருக்கோலத்தின் வாயிலாகவும் இத்திருநாமத்தின் வாயிலாகவும் பரம்பொருளோடு தொடர்புகொண்டு வாழ்தலே சைவம் எனல் வேண்டும். இச்சைவத்தின் முழுமுதல் கடவுளான சிவனை வணங்கும் அடியார்களின் வழிபாட்டுமுறைகளை பன்னிருதிருமுறைகள் வாயிலாக விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## திருமுறைகளின் சிறப்பு

வேதம் இறைவனுடைய வாக்கு. திருமுறைகள் அடியார்கள் வாயிலாக ஆண்டவன்

அருளிய வாக்கு. எனவே தெய்வத்தன்மை மிக்கவையாகும். இவை சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளை எடுத்துரைக்கின்றன. சிவ ஆகமங்கள் ஞான மார்க்கத்தை முடிந்த முடிவாக வற்புறுத்துவன. அதுபோல திருமுறைகளும் உலகு, உயிர், தடை நீங்கும் உபாயம், நீங்கினால் கிடைக்கப்பெறும் பயன் இவற்றை விளக்குகின்றன. பன்னிரெண்டு திருமுறைகளும் ஓம் என்ற பிரணவத்துள் அடங்கும். இதுவே சைவ சித்தாந்தக் கருத்தின் திருமுறையின் பங்குமாகும். திருமுறைகளில் அறுபத்திமூன்று நாயன்மார்கள் தாங்கள் படைத்த படைப்புகளின் வாயிலாக சிவபெருமானை வழிபட்டும் அவனது புகழை எடுத்துரைக்கும் தங்களது இறை பக்தியை வெளிப்படுத்தியுள்ளார்கள்.

**திருமுறை சொல் விளக்கம்**

உலகம் உயிர் இறைவன் என்ற முப்பொருள்களையும் முறையாக தருவன திருமுறைப்பாடல்கள்.திரு என்ற சொல் செல்வம் இறை, அழகு, ஒளி, பொலிவு, தெய்வத்தன்மை, நல்வினை போன்ற பல பொருள்களைக் கொண்டுள்ளன. முறை என்ற சொல் ஒழுங்கு, ஒழுக்கம், உறவு, கூட்டு, நன்மை, நூல் போன்ற பொருள்களை கொண்டுள்ளது. உயிருக்கு ஒழுங்கையும் அதனால் வருகின்ற ஒழுக்கத்தையும் உயிருக்கு இறைவனோடு உள்ள உறவையும் உயிர் இறைவனோடு கலக்கின்ற கூட்டையும் அதனால் உயிருக்கு ஏற்படுகின்ற நன்மைகளையும் நவில்வன திருமுறைகள் ஆகும்.

**பன்னிரு திருமுறைகள்**

சைவ சமயத்தில் திருமுறைகள் பன்னிரெண்டு. அவற்றுள் திருஞானசம்பந்தர் பாடிய தேவார தொகுதிகள் முதல் மூன்று. இவருடைய நூல் திருக்கடைக்காப்பு என்று அழைக்கப்படுகிறது. 4,5,6 - ஆம் திருமுறைகளை அருளிச் செய்தவர் திருநாவுக்கரசர். இவருடைய பாடல்கள் தேவாரம் என்று அழைக்கப்படுகிறது. ஏழாம் திருமுறை அருளிச் செய்தவர் சுந்தரர். இவருடைய பாடல் திருப்பாட்டு என்று அழைக்கப்படுகிறது. எட்டாம் திருமுறையை அருளிச் செய்தவர் மாணிக்கவாசகர். இவருடைய நூல்கள் திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும். ஒன்பதாம் திருமுறையை அருளிச் செய்தவர் ஒன்பது பேர் ஆவார்கள். அவர் பாடிய நூல்கள் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பதாகும். பத்தாம் திருமுறை அருளியவர் திருமூலர். இவருடைய நூல் திருமந்திரமாகும். பதினோராம் திருமுறையின் ஆசிரியர்கள் பன்னிரெண்டு பேர். இவர்களுடைய நூல்கள் நாற்பது. இதனை பிரபந்தமாலை என்பர். பன்னிரண்டாம் திருமுறையை சேக்கிழார் எழுதியது பெரிய புராணம் எனப்படுகிறது. இதை திருத்தொண்டர் புராணம் என்றும் கூறுவர்.

**வழிபாடு- விளக்கம்**

வழிபாடு என்னும் சொல் வணங்குதல், பின்பற்றுதல் எனும் பொருளில் ஆளப்படுகிறது. மனிதன் தன் இயலாமையை உணரும் போது தேவை மற்றும் நன்றி ஆகிய உணர்வுகள் தோன்றும் போதும் இறைவனின் ஆற்றலை அறியும் போதும் இறை வழிபாடு நடத்துகின்றனர்.

ஆனால் இறை வழிபாடு என்பது மேற்கூறப்பட்ட உணர்வுகள் தோன்றும் போது மட்டும் இயற்றப்படுவது அன்று. உயிர்களின் மீது எல்லையற்ற கருணை கொண்டு அவற்றை அறிவிக்கவே எஞ்ஞான்றும் எங்கும் இறைவனை வணங்குதல் நம் முதற்கடமை ஆகிறது. உயிர்களைப் பற்றியுள்ள மும்மலங்களை அறவே அகற்றி அவர்களுக்கு முக்தி நிலையை நல்கும் ஆற்றலுடைய இறைவனை வழிபடுதல் அவசியம் ஆகின்றது. உயிர் இயங்க தேவையான உடல் பற்றும் உலகியல் வாழ்விற்கு தேவையான அனைத்தையும் அழித்து காத்துவரும் இறைவனை நன்றியறிதலோடு வழிபடுதல் முறையும்மாகிறது.இந்நிலையை நோக்கும் போது இறைவழிபாடு என்பது நமக்குத் தேவைப்படும் போது மட்டுமன்றி, சுவாசித்தல் போல மனித வாழ்வில் இன்றியமையாத செயல்களில் முதலிடம் வகிப்பது என்னும் உண்மை பெறப்படுகிறது. இதைத்தான் திருநாவுக்கரசர்,

**அரியானை அந்தணர்தம் சிந்தையானை**
**அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்**
**தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்**
**திகழ் ஒளியைத் தேவர்கள் தம் கோனை மற்றைக்**
**கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்**
**கனை கடலைக் குலவரையைக் கலந்து நின்ற**
**பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்**
**பேசாத நாளெல்லாம் பிறவா நாளே (ஆறாம் திருமுறை - 981)**

என்று ஆறாம் திருமுறையில் பெரும்பற்ற புலியூரில் குடிகொண்டிருக்கும் ஈசனை நினையாத நாள் இப்புவியில் பிறவாத நாளே என்றுரைக்கிறார்.

**ஒன்றிய வழிபாடு**

இறைவனை பாடி பணிந்து ஆதரித்து ஏந்தியும் வழிபடுவதற்கு, வாழ்த்த வாயும் நினைக்க நெஞ்சும் தாழ்ந்த சென்னியும் தந்த தலைவனைச் மலர் கொண்டு வழிபடுதல் வேண்டும்.இறைவன் நாம் உடலில் உரைந்துள்ளான் என்பதை, உடம்பு ஓர் ஆலயம். உள்ளம் என்பது ஆலயத்தில் உள்ள ஒரு கற்பகிரகம். அந்தக் கர்ப்பக்கிரகத்தில் இறைவன் வீற்றிருக்கின்றான். பஞ்சேந்திரியங்கள் என்பது உடம்பாகிய கோயிலுக்கு ஏற்றிய ஐந்து விளக்குகள் ஆகும். ஞானம் பெற்றவனுக்கு ஐந்து புலன்களும் அணையாத விளக்கு களாகும். இதனை திருமூலர், *உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்* என்ற திருமந்திரப் பாடலால் மனிதன் மனம் ஒன்றிய நிலையில் வழிபாடவேண்டிய நிலையை விளக்கியுள்ளார்.

**பரம்பொருள்**

மக்கள் தங்களின் அறிவு, அனுபவம், விருப்பம் ஆகியவற்றிற்கு ஏற்ப பற்பல வடிவங்களில் தெய்வத்தை படைத்து பற்பல பெயர்களில் துதித்து வழிபட்டாலும்

அவையெல்லாம் பரம்பொருளாகிய ஒன்றையே சென்றடைகின்றன என்பார் திருமூலர். **ஒன்றே குலமும் ஒருவனே தேவன் (திருமந்திரம்- 2080)** என்று போற்றிப்பாடியுள்ளார். வள்ளலார் கூட பொங்குபல சமயமென்னும் நதிகலெல்லாம் புகுந்து கலந்திடுவாய் என்று சமயம் ஒன்றே என்று விளக்கம் கூறுவார்.

**இலிங்கவழிபாடு**

இலிங், கம் என்னும் இருசொற்கள் இணைந்து இலிங்கம் என்பதாகும். இலிங் - தோற்றம், கம் - ஒடுக்கம். எனவே அண்டங்களில் உள்ள அனைத்து பொருள்களும் தன்னுள் ஒடுங்குவதற்கு இடனாகியுள்ளான். ஒடுங்கி என்பது சிவஞானபோத முதல் நூற்பாவில் சுட்டப்படும். சிவபெருமான் உயிர்களுக்கு அருள் புரியவேண்டும் என்றக் கருணை பெருக்கினால் கொள்ளுகின்ற மூவகைத் திருமேனிகளில் அருவுருவத் திருமேனி இலிங்கமாகும். சக்தியும் சிவமாகி எனவரும் சித்தியார் பாடல் இலிங்கத்தின் உட்பொருளை உணர்த்துகின்றது. இலிங்க வழிபாடு தமிழரின் தொன்மை மிக்க வழிபாடு. ஹரப்பா, மொகஞ்சதாரோ அகழ்வாய்வுகள் இந்தியாவில் பரவியிருந்த இலிங்க வழிபாட்டினைப் புலப்படுத்துகின்றன. வீரசைவர்கள் இலிங்க வழிபாட்டினை முதன்மையாக போற்றுகின்றனர்.

**ஐந்தெழுத்து மந்திர வழிபாடு**

ஐந்தொழில்கள் புரிகின்ற சிவபெருமானை ஐம்புலன்களால் வழிபடுக என்று திருமுறைகள் பகர்கின்றன. எட்டாம்-திருமுறை-திருவாசகம் சிவபெருமானை வழிபட ஐம்புலன்களில் ஒன்றான வாயால், இறை ஞானத்தை உச்சரித்தாலே சிவனருள் கிட்டும் என்கிறது. ஐந்தெழுத்து மந்திரம் நமச்சிவாய ஆகும். இதில் நா - மாயை, ம –ஆணவம், சி – சிவம், ச – சக்தி, ய - உயிர் என்பதைக் குறிப்பிடுகின்றார். ந, ம என்ற எழுத்துக்கள் மறைப்புச் சக்தியையும் ஆணவ மலத்தை குறிப்பதால் உலக பயன் வேண்டுவோர் ந, ம வை முன்னிறுத்தி ஓதி வழிபடுவர். சி, வ என்பவை சிவத்தையும் அருளையும் குறிப்பதால் உலக பயன் வேண்டாது, வீடு பேறு வேண்டுவோர் சிகர வகரங்களை முன்வைத்து ஓதி இறைவனை வழிபடுவர். இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை பயக்கும் இம்மந்திரத்தை கூறுதல் எளிது. நாம் எங்கு இருக்கின்றோமோ அங்கிருந்தே ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதலாம் ஐந்தெழுத்து மந்திரத்தை உச்சரிக்கும் போது நம்முடைய காதுகள் அந்நாமத்தை கேட்பதால் பயனடைகின்றன. அப்போது மனதில் இறை காட்சி விரிகின்றது. இவ்விறை காட்சியைக் கண்டு உடல் பரவசம் அடைகின்றது. கைகள் இரண்டும் தலைமேல் குவிகின்றன. கண்களில் நீர் பெருகுகின்றது. ஐம்புலன்களையும் இறைவனிடத்து செலுத்தும் சக்தி வாய் சொல்லுக்கு இருக்கிறது என்பதை உணர்த்த விளைந்த மாணிக்கவாசகர் திருவாசகத் தொடக்கத்திலேயே, நமச்சிவாய வாழ்க (சிவபுராணம்) என்று ஐந்தெழுத்து மந்திரத்தை வைக்கின்றார். இறைவனை அடைய வேண்டும் எனில் அவன் நாமத்தை இருக்கின்ற இடத்திலேயே உச்சரித்தாலே போதும் என்கிறார்.

சிவநாமத்தை உச்சரித்தால் தீவினைகள் அகன்றுவிடும். சிவ நாமத்தை உச்சரித்தால் தெய்வீக வடிவத்தை பெறுவார்கள். சிவசிவ என்று கூறினால் ஆன்மா சிவத்தோடு இணைந்து கொள்ளும் என்பதை,

**சிவ சிவ என்கிலர் தீவினையாளர்**

**சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்**

**சிவ சிவ என்றிடத் தேவருமாவர்**

**சிவசிவ என்னச் சிவகதி தானே (திருமந்திரம் - 2716)**

என்ற திருமந்திரப் பாடல் உணர்த்துகின்றது.

**ஒழிந்தேன் பிற உறவென்னும் பாசம்**

**கழிந்தேன் கடவுளும் நானும் ஒன்றானேன்**

**ஆழிந்தாங்கு இனிவரும் ஆக்கமும் வேண்டேன்**

**செழுஞ்சார்புடைய சிவனைக் கண்டேனே. (திருமந்திரம் - 2958)**

என்று திருமூலர் பாடுவதிலிருந்து இறைவனுடைய திருவருள் கிடைத்ததனால் இனி உலகில் பிறந்து இன்ப துன்பம் அனுபவிக்க வேண்டியது இல்லை. இறைவனும் தானும் ஒன்றாகி விட்டோம் என்று மகிழ்ச்சியில் பாடுகிறார்.

**சிவச்சின்னங்கள்**

நீறில்லா நெற்றி பாழ் என்பது அவ்வையாரின் வாக்காகும். திருநீறு பூசுதல், பாவங்களை போக்கும், மேன்மையானச் செல்வத்தைக் கொடுக்கும், பாண்டியனின் வெப்பு நோயை சிவச்சின்னமாகிய திருநீறுதான் மருந்தாக இருந்து நீங்கியது. சைவர்களுக்கு திருநீறு கவசமாகும்.

**கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை**

**மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாகில்**

**தங்கா வினைகளும் சாரும் சிவகதி**

**சிங்காரமான திருவடி சேர்விரே (திருமந்திரம் ஆறாம் தந்திரம் - 1)**

என்ற திருமந்திரப்பாடல் திருநீறு அணிவதால் இறைவனது அழகிய திருவடிகளை அடையும் பேற்றினை பெற்றுக்கொள்ளலாம் என கூறுகின்றது.

**பஞ்சாட்சரம்**

நடராசர் வடிவமே பஞ்சாட்சர வடிவமாகும். நமசிவாய என்னும் மந்திரத்தை ஓதினால் நல்வினைகள் உண்டாகும்.

**நம் முதல் ஓர்ஐந்தின் நாடும் கருமங்கள்**

**அம் முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை**

**சிம் முதல் உள்ளே தெளிய வல்லார்கட்குத்**

**தம்முதல் ஆகும் சதாசிவம் தானே (திருமந்திரம் நான்காம் தந்திரம் -983)**

என்ற திருமந்திரப் பாடல் பஞ்சாட்சரத்தின் மகிமையை உணர்த்துகின்றது. நமச்சிவாய என சிவனை குறிப்பிடுவதுடன் அந்த பலத்தை சுவைத்து உண்பவர்களுக்கு அளவில்லா இன்பத்தை தரும் என்பதை திருமந்திரத்தில் கூறுகின்றது.

**குரு வழிபாடு**

**குருவும் கெழுவும் நிறனாகும்மே (தொல்.சொல். உரியியல் - 5)** என்பது தொல்காப்பியம். குரு என்ற சொல்லுக்கு நிறன் என்ற பொருளில் தொல்காப்பியர் கூறுவர். சீடன் உள்ளத்தில் உள்ள அறியாமையாகிய இருளைப் போக்கி அறிவொளியை ஊட்டுபவன் குரு எனப்படுபவர். அதுபோல அறியாமை என்னும் இருளில் மூழ்கிக் கிடக்கும் உயிருக்கு இறைவனாகிய குரு தானே வந்து அறிவாகிய ஒளியை வழங்குவான்.

**அருபரத் தொருவன் அவனியில் வந்து**
**குருபர னாகி அருளிய பெருமையைச்**
**சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்**
**பிறிவினை யறியா நிழலது போல (திருவாசகம், போற்றித் திருஅகவல், பா .1)**

என்பது மாணிக்கவாசகரின் வாக்காகும். சிவனே குருவாகி வருவதால் அவனுக்கு சிவகுரு, ஞானகுரு, சத்குரு என பல பெயர்கள் உண்டு. சிவகுரு பக்குவம் உள்ள ஆன்மாவின் உள்ளத்தில் பக்தியை ஊட்டி திருவடி தந்து ஐந்தெழுத்தை உபதேசித்து இறை, உயிர், தளை எனும் முப்பொருள்களை உணர்த்தியருளுவான்.

குருவின் மேன்மையைத் தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்ந்தவிட்டு சிவஞானபோதம் (ஐம்புல் வேடரின் - 8) விளக்குகின்றது. சுட்டிக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது என்பதால் உயிர்கள் முப்பொருள் உண்மையை குருவாயிலாக உணர்ந்து அவர்கள் காட்டும் நெறி நின்றால் திருவருளைப் பெறலாம் என்பதனாலேயே இறைவனைக் குருவாய் வருவாய் என்று வேண்டுகின்றனர்.குருவின் திருமேனியைச் சிவன்திரு மேனியாகவே காணுதல் வேண்டும் என்பது முதலான திருமந்திரச் சிந்தனைகள் குருவழிபாட்டை மேற்கொள்ளத்தூண்டுதலாக அமைகின்றன.

**அடியார் வழிபாடு**

அடியார்கள் வேடம், சிவக்கோலத்தை எதிரொலிப்பது. நாயன்மார்களின் உருவம், உள்ளம், செயல் மூன்றிலும் புனிதராக வாழ்ந்து சிவனாகவே மதிக்கப் பெற்றனர். தொழுது தொண்டர் பாதம் பணிந்து என்று காரைக்கால் அம்மையார் வழிபாடு பற்றிக் கூறுகின்றார். இறைவன் - உடையான் அவனது அடிமை உயிர் என்று உணர்ந்து இறைவனுக்கும் அவன் கலந்துள்ள அனைத்து உயிர்களுக்கும் நலம் பெறுவதற்கு தொண்டு செய்வதே அடியார் வழிபாடாகும். என் கடன் பணி செய்து கிடப்பதே என்பது அப்பர் வாக்கு. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் முறையே கணநாதர்அப்பூதியார், பெருமிழலைக் குறும்பர் ஆகியோர் குருவாக வழிபட்டு பேறு பெற்றதை பெரியபுராணம் குறிப்பிடுகின்றது.

இறைவனுடைய ஐந்தெழுத்திற்கு நிகரான ஆற்றல் அடியார்கள் திருப் பெயர்களுக்கு உண்டு என்பதை திருஞானசம்பந்தர் என்னும் திருப்பெயர் கேட்ட அளவிலேயே கூன் பாண்டியனுக்கு வெப்பு நோய் துயரம் சற்று விளக்கியதாக பெரியபுராணம் கூறுகிறது. திருநாவுக்கரசு என்ற சொல்லை எழுதியும் கூறியும் அப்பூதியடிகள் துன்பம் நிக்கப்பெற்றதாக சிவப்பிரகாசர் நால்வர் நான்மணிமாலையில் பாடியுள்ளார்.

மாணிக்கவாசகர் இறைவனிடத்து அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரிவாய் என்றே வேண்டுகின்றார.; அடியார்களுக்கு இவ்வளவு பெருமை ஏற்பட காரணம் அவர்கள் உள்ளத்தில் இறைவன் வைத்திருப்பதேயாகும். பெரியபுராணம் சுட்டும். தனியடியார், தொகையடியார் வாழ்வுகளை ஊன்றி உணர்ந்து அடியார்களை வழிபடுவதோடு,

**மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்**
**அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல் (பெரியபுராணம், பா. 2985)**

என்னும் பேரறத்தை மேற்கொண்டு நலம்பெற வேண்டும் என்று திருமுறைகள் வெளிப்படுத்துகின்றன.

**சைவ விரத வழிபாடுகள்**

என்றும் போல் வாழாது ஒரு குறிபிட்ட நாளில் கட்டுப்பாட்டுடன் வாழ்வது விரதம் என்பர். சைவர்கள் விரதங்களில் போதும் சிறப்பாகச் சிவவழிபாடு மேற்கொள்ளுதலையே சிவபூசை செய்தலையே பெரிதும் வற்புறுத்தும். சோமவாரம் - திங்கட்கிழமை, ஆதிரை நோன்பு, சிவராத்திரி, பிரதோசம், அட்டமி, திருக்கார்த்திகை, உமாமகேசவர விரதம் போன்றவை மாதவழிபாட்டு நெறிகளாக அடியார்களால் வழிபாடு வருகின்றனார்.

**நால்வகை வழிபாட்டுநெறிகள்**

வழிபாட்டு நெறிகளைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு விதங்களில் திருமுறைகள் வகுக்கின்றன. இவற்றை மாணிக்கவாசகப் பெருமான் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என செந்தமிழ் சொல்களால் குறிப்பிடுகின்றார். இந்நான்கு நெறிகளுக்கும் உள்ளீடாக அடிப்படையாக அமைவது அன்பு நெறியாகும். சிவபெருமான் மீது அன்பு மீதூர, உள்ளம் உருகி நாம் மேற்கொள்ளும் செயல்கள் அனைத்தும் வழிபாட்டு முறைகளாகும்.

- சரியை என்பது சிவபெருமானின் உடலால் மேற்கொள்ளப்படும் செயல்களான தவமாகும்.
- கிரியை என்பது உடலாலும் உள்ளத்தாலும் இயற்றப்படும் வழிபாட்டு முறைகள் அடங்கிய தவமாகும்.
- யோகம் என்பது உள்ளத்தில் எஞ்ஞான்றும் இறைவனையே நினைத்து ஒன்றிவிடும் தவம்.
- ஞானம் எனப்படுவது சிவபெருமானை அறிவார் அறியும் தவமாகும்.

இந்நான்குமே இறுதியாக விஞ்ஞானத்தை நல்கி முக்திப் பேறு அளிக்கும் ஆற்றல் உடையன.

திருமுறை ஆசிரியர்கள் பல்வேறு வகைப்பட்ட வழிபாட்டு முறைகளை குறிக்கின்றனர். அவை வாக்கினால் வழிபடுவது, செயலினால் வழிபடுவது, மனதினால் வழிபடுவது ஆகிய முறைகளில் அடங்கும்.தில்லையம்பதியில் வாழ்ந்த அந்தணர்கள் வேதம் ஓதி வேதங்களின் தலைவனை வழிபட்ட செய்தி திருமுறைகளில் காணக் கிடைக்கின்றது.

சிவபெருமானின் சிறப்புகளையும் பெருமைகளையும் புகழ்ந்து பாடுதலை ஒரு வழிபாட்டு முறையாக திருமுறைகள் குறிக்கின்றன. திருமுறைகளை தினமும் ஒதுதலே எளிமையான வழிபாட்டு முறையாகும்.

**ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமிலாற்காயிரம்**
**திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ**

**(எட்டாம் திருமுறை- திருத்தெள்ளேணம் - 1)**

என எட்டாம் திருமுறையும்

**பண்ணிடைச் சுவையின் மிக்க**
**கின்னரம் பாடல் கேட்பார் (நான்காம் திருமுறை - திருக்கச்சிமேற்றளி -43)**

என நான்காம் திருமுறையும்

**... ஞானசம்பந்தன் செந்தமிழ் கொண்டு இசை**
**பாடும் ஞானம் வல்லார் அடி சேர்வது ஞானமே (இரண்டாம் திருமுறை - 107)**

என இரண்டாம் திருமுறையில் பாடல்களை இசைத்தால் இறைவனை அடையும் வழி என்று தெளிவுபடுத்துகின்றன.

**பெண்களுக்கான வழிபாட்டுநெறிகள்**

இறைவன் அனைத்து உயிர்களையும் காத்து அருள்பவன். திருக்கோவில்களை தூய்மைப்படுத்தி தூசி, அழுக்கு, துகள்கள் நீங்கும்படி திருவலகைக் கொண்டு கூட்டி சுத்தம் செய்தல், ஆலயங்களை தண்ணீர் கொண்டு மெழுகி சுத்தப்படுத்துதல், நறுமணமிக்க மலர்களைப் பறித்துவந்து மாலைகளைத் தொடுத்து சிவபெருமானுக்கு அணிவித்தல,; மலர்கள் மலர கூடிய செடிகளை ஆலயங்களில் வைத்து பராமரித்து தூய மஞ்சள் நீர் கொண்டு வந்து தருதல், திருக்கோவில்களில் திரு விளக்கு இடுதல், திருமுறைப் பாடல்களை முறைப்படி சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுதல் ஆகிய இவையாவும் எளிய வழிபாட்டு முறைகள் என நான்காம் திருமுறை வருகின்றது. இதை சரி கிரியை தொண்டுகளும் ஆகும். அவ்விறைவனை வழிபடும் அடியார்பெருமக்களுள் பெண்களும் அடக்கம். எனவே மாணிக்கவாசகர் பெண்களுக்கான வழிபாட்டு நெறியை கூறும் போது இறைவனுக்கு பொற்சுண்ணம் இடித்தல், பூப்பறித்தல் போன்ற தொழில்களை பெண்கள் செய்யும் பொழுது பாடுகின்றப்பாடல்களை தம் திருமுறையில் சுட்டியுள்ளார். அப்பாடல்களில் சிவனின் அற்புதச்செயல்களை வைத்துப்பாடியுள்ளார். தொழில் செய்யும் போது பெண்கள் பாடுவது போல அவர்களுடைய விளையாட்டுகளான அம்மானை,தெள;ளேணம்,தடை எழுப்புதல், உந்தி

பறத்தல், தோணோக்கம், ஊசல் ஆடுதல் போன்ற விளையாட்டுகளின் போதும் சிவபெருமானின் பெருமைகளைப் பாடி ஆடுமாறு பெண்களுக்கு வழிகாட்டுகின்றார் மாணிக்கவாசகர்.

**அம்மானை**

பெண்கள் மனைகளில் ஆடும் ஆடல்களில் அம்மானையும் ஒன்று. இவ்விளையாட்டின் போது பெண்கள் கதைப்பாடல்களைப் பாடி விளையாடுவது வழக்கம்.அம்மானை விளையாடும்போது சிவபெருமானின் திருவிளையாடல்களான பிட்டுக்கு மண் சுமந்த கதையைப் பாடுமாறு மாணிக்கவாசகர் திருவம்மானையில் கூறுவதை, மண்சுமைந்து கூலிகொண்டு அக்கோலால் மொத்துண்டு (திருவாசகம் - திருவம்மானை) என்ற பாடல் வரிகளில் காணலாம்.இப்பாடலில் அடியாருக்காக இறை மண்சுமந்த நிகழ்வை காணலாம்.

**தெள்ளேணம்**

கைகொட்டிப் பாடியாடும் பெண்கள் விளையாட்டுகளில் தெள்ளேணமும் ஒன்று. இவ்விளையாட்டின் போது மகளிர் இறைவனின் பெருமைகளைப் புகழ்ந்து கைகொட்டிப் பாடுமாறு மாணிக்கவாசகர் கூறுகின்றார். அரியாலும் பிரம்மனாலும் கண்டறிய முடியாத சிவபெருமானின் தோற்றத்தை, ஒருநாமம் ஓருருவம் ஒன்று மில்லாற்கு ஆயிரம் திருநாமம் (திருவாசகம் - தெள்ளேணம்) என்று பாடி ஆடுமாறு தித்தெள;ளேணத்தில் கூறுகின்றார்.

**தடைவிடை எழுப்புதல்**

பெண்கள் தங்களுக்குள் வினாக்களை எழுப்பி அதற்கான விடைகளைக் கூறி விளையாடும் விளையாட்டு சாழலாம். பெண்கள் இறைவனின் தோற்றத்தையோ அல்லது அவனுடைய பெருமையையோ வினாவாக எழுப்பி அதற்கான விடையை விளையாட்டின் வழியாக கண்டறியுமாறு கூறுகின்றார். தன்னை மதியாது வேள்வி செய்த தக்கனின் தலையறுத்தவன்; சிவன், வேள்விக்குத் தலைவனையும் தேவர் கூட்டத்தையும் அளித்தது என்ன நியாயம்? என்ற வினாவினை எழுப்பித்தக்கனுக்கு ஆட்டுத்தலையை வைத்ததும் தேவர்களை அடக்கியதும் நியதிப்படி நடந்தவை தான் என்று விடை கூறி விளையாடுமாறு,

**தக்கனையும் எச்சனையும் தலையறுத்துத் தேவர்கணம்**
**தொக்கன வந்தவர் தம்மைத் தொலைத்தது தான் என்னேடீ**
**தொக்கனவந்தவர் தம்மைத் தொலைத்தருளி அருள் கொடுத்தங்கு**
**ஏச்சனுக்கு மிகைத்தலை மற்றருளினன் காண் சாழலோ (திருவாச. திருச்சாழல், பா. 05)**

என்றப் பாடல்களில் கூறுகின்றார்.

**தோணோக்கம்**

பெண்கள் ஒருவர் தோளை ஒருவர் நோக்கியும் தீண்டியும் விளையாடும் விளையாட்டுத் தோணோக்கமாகும்.இவ்விளையாட்டினை விளையாடும் போது சிவபெருமானின் செயற்கரிய செயல்களான மன்மதன், எமன் ஆகியோரின் உயிர்களை எடுத்ததையும் சூரியனின் பல்,

சரஸ்வதியின் மூக்கு, சிவனின் தலை, அக்கினியின் கரம், சந்திரனின் கலை, தக்கனின் தலை ஆகியவைகளை துண்டித்ததையும் பாடி ஆடுமாறு, தூய்மைகள் செய்தவா தோணோக்கம் ஆடாமோ (திருவாசகம் - தோணோக்கம்) என்ற பாடல் அடிகளில் திருத்தோணோத்தில் குற்றம் செய்தவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்ற கருத்தை பாடி ஆடுமாறு பெண்களுக்கு கூறுகின்றார்.

**ஊஞ்சல்**

பெண்கள் ஊஞ்சல் கட்டி விளையாடுவது வழக்கம். அவ்வாறு ஊஞ்சல் ஆடும் போது நாராயணன், முக்கண்ணன், தேவர்கள் போன்றவர்களாலும் அறியப்படாதவனும் கடல் நஞ்சை உண்டருளியவனும் குதிரைப் பாகனாய் வந்தருளியவனும் உமையை இடப்பாகத்தில் கொண்டவனும் உத்தரகோச மங்கையில் எழுந்தருளி பிறப்பறுப்பவனும் ஆகிய சிவபெருமானின் தோற்றத்தையும் பெருமையையும் பாடி ஆடுமாறு திருப்பொன்னூசலில் பெண்களுக்கான வழிபாட்டு முறையாகமாணிக்கவாசகர் கூறுகின்றார்.

**உடல் உறுப்புகள் வழிபாடு**

அகத்தூய்மை வழிபாடு மாதங்களில் மார்கழியாய் இருக்கின்றவன் சிவன். மார்கழி மாதத்தில் பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து நீராடி வழிபாடு செய்தால் இறையருள் கிட்டுவது திண்ணம். மனிதன் பெற்றிருக்கும் உடல் உறுப்புகள் ஒவ்வொன்றும் இறைவழிபாட்டிற்கு உரியன. அவற்றைக்கொண்டு வழிபடும் முறைகளை பதினோராம் திருமுறையில்,

**சிந்தை செய்ய மனம் அமைத்தேன் செப்ப நா அமைத்தேன்**
**வந்தனை செய்யத் தலை அமைத்தேன் கைதொழ அமைத்தேன்**
**பத்தனை செய்வதற்கு அன்பு அமைத்தேன் மெய் அரும்ப வைத்தேன்**
**வெந்தவெண்ணீறுஅணி ஈசற்கு இவை யான் விதித்தனவே**

**(பதினோராம் திருமுறை 6, பொன்வண்ணத்தாந்தாதி - 92)**

என சாதனம் செய்யும் முறைகளை விளக்குகின்றது. சிவபெருமானை வழிபடுவதற்கு காலவரையறை கிடையாது. எந்நேரமும் எவ்விடத்திலும் ஈசனை வழிபடலாம். வழிபடுவோருக்கு இடம், காலம், உருவம், பூசனை பொருட்கள் இவை யாவும் தேவையற்றதாகி விடுகின்றன. இறைவனை மனதில் நிறுத்தி இடையீடு இன்றி இறையுடன் ஒன்றி வழிபடுதல் யோகநெறியாகும். அந்நெறியில் வழிபடும் பொழுது பார்த்த இடமெல்லாம் பரமனாக, காணும் பொருளெல்லாம் இறைவனின் வடிவங்களாகவே தோன்றும். முக்கரணம் வழிபாடு சைவத்தில் பலபடப்பேச பெறுவது. மனம், மொழி, மெய் இவற்றால் வழிபாடு செய்தல் சிறப்பு.

**கண்டெந்தை என்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யேனேல்**
**அண்டம் பெறினும் அது வேண்டேன் - துண்டஞ்சேர்**
**விண்ணாளும் திங்களாய் மிக்குலம் ஏழினுக்கும்**
**கண்ணாளா ஈதென் கருத்து (அற்புததிருவந்தாதி - 72)**

என்று பாடலில் காரைக்கால் அம்மையார் முக்கரண வழிபாடு செய்தலை உணர்த்துகின்றார். இப்பாடலில் கண்டு என்றது மனதினால் இறைவனைக் காணலையும் எந்தை என்றிறைஞ்சி என்றது வாக்கிகால் துதித்தலையும் கைப்பணி என்பது மெய்யினால் பணி செய்தலையும் குறிக்கும். அவன் அருளாலே அவன் தாள் வணங்கி என்றார் மாணிக்கவாசகர் என் நெஞ்சம், நல்ல நெஞ்சம், நான் தவமுடையேன் ஆகவே சிவனுக்கே ஆளாகிவிட்டேன் என்கிறார் அம்மையார்.

**யானே தவமுடையேன் என்னெஞ்சே நன்னெஞ்சம்**
**யானே பிறப்பறுப்பான் எண்ணினேன் - யானே அக்**
**கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற**
**அம்மானுக்(கு) ஆளாயினேன் (அற்புததிருவந்தாதி - 50)**

மேற்கண்ட வழிபாட்டு முறைகளுடன் மிகமிக எளிய வழிபாட்டு முறைகளை முன்வைக்கின்றது பத்தாம் திருமுறை. அது மக்கள் தொண்டே மகேசன் பணி எனக் கருத்தை கொண்டு அமைந்துள்ளது. சிவ பெருமானை இடைவிடாது பூசிக்கும் சிவனடியார்களுக்கு தொண்டு செய்வது சிவத்தொண்டு ஆகும். இக்கருத்தை,

**படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்**
**படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே (திருமந்திரம் - 1857)**

என்ற பாடலின் வழி பத்தாம் திருமுறை நிரூபிக்கின்றது. மேலும் ஆயிரம் அந்தணர்களுக்கு ஈவதைவிட ஆயிரம் சிவாலயங்களை அமைப்பதை விட சிவனடியார்களுக்கு செய்யும் சிறந்த சிவச்சேவை சிவவழிபாடு என்று பத்தாம் திருமுறை நிரூபிக்கிறது. ஞானநெறி என்பது அதுவரை உயிர்களை சூழ்ந்திருந்த அஞ்ஞானமாகிய அறியாமை அகல பெருநிலை மெய்யறிவு சூழப்பெற்ற இறைவனை அறியும் நிலை. சிவபெருமான் உயிர்கள் மீது கொண்ட எல்லையற்ற கருணையினால் குருவடிவாகிக் குவலயம் தன்னில் திருவடி வைத்தத் திறம் இது. சிவபெருமான் மீது ஒருமித்த அன்பு கொண்டு உயிர்கள் செய்யும் வழிபாடு எத்தகையது ஆயினும் அது ஈசனுக்கு உகந்ததே. பன்னிரெண்டாம் திருமுறையில் வரும் கண்ணப்ப நாயனார் வரலாறு உண்மைக்கு ஒரு எடுத்துக்காட்டு. பல ஆண்டுகளாக சாஸ்திர வழியில் நின்று பூசனை மேற்கொண்ட சிவாச்சாரியாரின் வழிபாடு முறைகளை விட ஆகம நெறிக்கும் முற்றும் முரணான பூசை செய்த கண்ணப்பநாயனாரின் வழிபாட்டு முறைகளை சிவபெருமான் ஏற்றுக்கொண்டருளினார். மிகுந்த பொருட்செலவில் சாஸ்திரங்களின் வழிநின்று ஒரு அரசன் எழுப்பிய கோயில் குடமுழுக்குத் தவிர்த்து பூசலார் நாயனார் தம் மனதிற்குள்ளேயே எழுப்பிய மனக்கோயிலுள் ஈசனூர் குடியமர்ந்த செய்தியும் திருமுறைகள் நமக்கு காட்டும் வரலாற்று உண்மையாகும்.

**முடிவுரை**

இறைவழிபாடு என்பது உள்ளம் உருகி செய்யப்படவேண்டிய ஒன்று. வழிபாடுகள் அனைத்துமே முக்தி நிலை நோக்கி மேற்கொள்ளப்படும் முயற்சி ஆகும். வழிபாட்டு முறைகள் தவமாகும். இறைவழிபாட்டின் மூலம் ஒழுக்கமும் மன அமைதியும் இறை சிந்தனையும் இறை உணர்வும் பற்றியும் நமக்கு கிடைக்கப் பெறுகின்றன. திருமுறைகள் காட்டும் எளிய வழிபாடு முறைகளை பின்பற்றி சிவனருள் பெற்று பிறவா பெருநிலை பெற்று உய்வோமாக!!!

**துணைநின்ற நூற்கள்**

[1] இளம்பூரணர். *தொல்காப்பியம்.* மணிமேகலை பிரசுரம், சென்னை, 1981.

[2] முனைவர் நல்லூர் சா. சரவணன். *சிவஞானபோதம்.* சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை - 2018

[3] இராசமாணிக்கனார். *திருத்தொண்டர் புராணம்.* (தொகுதி - 1) வர்த்தமானர் பதிப்பகம், 1998.

[4] இராசமாணிக்கனார். *திருத்தொண்டர் புராணம்.* (தொகுதி - 2) வர்த்தமானர் பதிப்பகம், 1998.

[5] ப.அருணாசலம். *சைவசமயம்.* மணிவாசகர் பதிப்பகம், 2004.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை.

**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை.

**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை.


**Chenkaantal**
*A Bi-Yearly Peer-Reviewed Tamil Journal*

**Volume - 1, Issue - 2, May 2022** **E-ISSN: 2583-0481**

# The Concept of Tholkappiyar's Nookku Approach in *Kurinjikali*

**Ms R.Menaga**, Assistant Professor of Tamil, PSGR Krishnammal College for Women, Coimbatore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-5579-5635**
**DOI: 10.5281/zenodo.6607696**
**Received** 12 March 2022; **Revised form** 11 April 2022; **Accepted** 26 April 2022; **Available online** 26 May 2022.

## Abstract

*Tolkappiyam is an incomparable epic that retains a unique place in the world of Tamil literature. It is proud to be the first complete grammar book in Tamil. Tolkappiyam describes Tamil as a language and its literary structure as a system. It also distinguishes Tamil from other language literary traditions by highlighting the features of Tamil. This is well known as it emphasizes in many ways the system in which Tamil differs from the literary traditions dealt with, especially in the Northern languages. The book is based on linguistics and poetry. The multifaceted development of this theory can be seen when the theoretical theory of the archaeologist is applied in the literary texts. The purpose of this article is to explore the theories of the commentators and to apply this theory in a concise manner.*

**Keywords:** Kurinjikali, Tholkapiyam, Porulathigaram, Kotpaatu.

## References

[1] Sivalinganar.A, *Tolkappiyam Uraivalam, Porulathikaram.* World Tamil Research Institute, Second Main Road, Central Institute of Technology, Tharamani, Chennai – 600113.

[2] Dr. SY Shanmugam, *Porulilakkanak Kotpadu, Tolkappiyam Volume - 2*, (Yappum Nokkum). Meyyappan Publishing 53, New Street, Chidambaram – 608001.

[3] Tamilnadu, *Sanga Ilakkiya Oppeedu Ilakkiya Kolgaigal*. Meenakshi Book Center, Mayura Complex 48, Thalappa Mudali Street, Madurai – 625001.

[4] Thamizhannal, *Tholkappiyarin Ilakkana Kolgaigal.* Sellappa Publishing House, Mayura Complex 48, Thanappa Mudali Street, Madurai – 625001.

**Author Contribution Statement:** NIL.
**Author Acknowledgement:** NIL.
**Author Declaration:** I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

# குறிஞ்சிக்கலியில் தொல்காப்பியரின் நோக்குக் கோட்பாடு

**திருமதி ர.மேனகா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

பூசாகோஅர கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி, கோயம்புத்தூர், தமிழ்நாடு, இந்தியா.

**ORCiD: https://orcid.org/0000-0002-5579-5635**

**DOI: 10.5281/zenodo.6607696**

**ஆய்வுச்சுருக்கம்**

*தமிழிலக்கண உலகில் தன்னிகரற்ற ஓர் இடத்தைத் தக்க வைத்துக் கொண்ட ஒப்பற்ற பெருநூலாக விளங்குவது தொல்காப்பியமாகும். தமிழில் முழுமையாகக் கிடைத்த முதல் இலக்கணநூல் என்ற பெருமைக்கு உரியது. 'தொல்காப்பியம்' தமிழை ஒரு மொழியாகவும், அதன் இலக்கிய அமைப்பை ஒரு முறையாகவும் விவரிக்கின்றது. தமிழின் சிறப்பம்சங்களை எடுத்துக் கூறுவதன்மூலம், தமிழைப் பிறமொழி இலக்கிய மரபுகளில் இருந்தும் பிரித்துக் காட்டுகின்றது. குறிப்பாக வடமொழி மரபுகளில் கையாளப்படும் இலக்கிய மரபுகளில் இருந்து தமிழ் வேறுபடும் முறைமையினைப் பலவிடங்களில் இது அழுத்தமாகக் கூறுவது கொண்டு இதை நன்றாக அறிய முடிகிறது. இந்நூலானது மொழியறிவியல் அடிப்படையிலும், கவிதையுணர்வு அடிப்படையிலும் அமைந்துள்ளது எனலாம். அவ்வாறு அமைந்துள்ளத் தொல்காப்பியரின் நோக்குக் கோட்பாட்டினை இலக்கிய நூல்களில் பொருத்திப் பார்க்கப்படும்போது இக்கோட்பாட்டின் பன்முக வளர்ச்சியினை காண முடிகின்றது. மேலும் இக்கோட்பாடு குறித்து உரையாசிரியர்களின் கருத்து மற்றும் கலித்தொகையில் ஒன்றான குறிஞ்சிக்கலியில் இக்கோட்பாட்டினை பொருத்தி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**திறவுச்சொற்கள்:** குறிஞ்சிக்கலி, தொல்காப்பியம், பொருளதிகாரம், கோட்பாடு.

**முன்னுரை**

பழந்தமிழ் மரபுகளை உணர்த்தும் பழமையான இலக்கண நூலாகத் திகழும் தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று பிரிவுகளை உள்ளடக்கியதாகும். எழுத்து என்ற பெரும்பிரிவில் தனித்துநின்ற எழுத்து, எழுத்துக்களின் பிறப்பு அவை புணர்மொழியில் பெரும் மாற்றங்கள் போன்றவை கூறப்படுகின்றன. சொல் பற்றிய பிரிவில் சொற்கள் தொடர்ந்து தொடர்களாக அமையும் முறை, தமிழுக்குச் சிறப்பாக அமையும் அல்வழி வேற்றுமைத் தொடர்களின் இலக்கணம், பெயர், வினை, இடை, உரிச்சொற்களின் வேவ்வேறு வகையான விளக்கங்கள் போன்றவை பேசப்படுகின்றன. பொருள் இலக்கணம் இலக்கிய ஆக்கம் பற்றியதாகும். அதில் அகத்திணை புறத்திணை மரபுகள், இலக்கிய வகைமைகள், இலக்கியத்திற்கு அழகு சேர்க்கும் உவமை, மெய்ப்பாடு, அணிகள், இலக்கியக் கொள்கைகள்

போன்றவை அக்கால மரபுப்படி எடுத்தியம்பப்படுகின்றன. பொருளதிகாரம் தமிழ் இலக்கியம் ஆக்கப்படும் முறையைக் கூறுகின்றது என்பதை, அதன் உள்ளடக்கத்தினைக் கண்டு அறியமுடிகின்றது. தமிழின் மிகப் பழமையான கவிதையியல் கொள்கை தமிழ்ச் செய்யுள் படைப்புகளை அகம், புறம் என்ற அமைப்பிற்குள் அடக்கிப் பார்க்கின்றது. இதன் அடிப்படையில் தொல்காப்பியப் பொருளதிகாரம் தமிழின் இலக்கியக் கோட்பாடுகளை வரையறுக்கும் பகுதி என்றே கொள்ள வேண்டும். ஏனெனில் பொருளதிகாரத்தில் தமிழ் இலக்கியத்தின் பொருள் இன்னவை என்பதும், அதன் இலக்கியம் இவ்வாறு உருவாக்கப்படவேண்டும் என்பதும், அது இன்ன வகைமையது என்பதும், அதன் எடுத்துரைப்பு மரபு இது என்பதும் மிக தெளிவாக அறியமுடிகின்றது. அவ்வகையில் பொருளதிகாரம் வரையறுக்கும் இலக்கியக் கோட்பாட்டுள் ஒன்று 'நோக்கு' என்பதாகும்.

**நோக்குக் கோட்பாடும் உரையாசிரியர்களின் விளக்கமும்**

தொல்காப்பியர் மட்டுமே குறிப்பிடும் ஒரு கோட்பாடு ‘நோக்கு’ பிற்காலத்தவர் இதன் அருமையை விளங்கிக்கொள்ளாததாற் போலும் இதனை அறவே விட்டுவிட்டனர். தொல்காப்பியரும் ஒரே ஒரு நூற்பாவில் மட்டுமே இக்கோட்பாட்டை விளக்கியுள்ளார்.

**“மாத்திரை முதலா அடிநிலை காறும்**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே” (தொல். செய்யுள் நூற்: 1361)**

இந்நூற்பாவுக்கு இளம்பூரணரும் பேராசிரியர் மற்றும நச்சினார்கினியர் ஆகியோர் தந்துள்ள உரைகள் ஒளிபாய்ச்சுகின்றன. அதிலும் பேராசிரியர் விளக்கம் இக்கோட்பாட்டை உலகளாவிய கோட்பாடாக வளர்ந்து, இலக்கியங்களில் ஏற்றிப் பார்க்குமாறு முழுமைபெற உருவாக்க வழிகாட்டுகிறது.

பரதமுனிவர் ஒரு சூத்திரத்தில் குறித்த இரசக்கோட்பாடு, பிற்பாடு பற்பல திறனாளர்களால் பலநூறு பக்கங்களில் விரித்துரைக்கப் பெற்றது. அரிஸ்டாடிலின் கவிதை இயல், இன்றைய ஐரோப்பிய மொழிகளிற் காணும் இலக்கியக்கோட்பாடுகள் அனைத்திற்கும் ஊற்றுக்கண் ஆனது. தமிழில் அவ்வாறு வளர்ச்சிகாணுமளவு, தொல்காப்பியர் பலவற்றைக் கூறிப்போயிருந்தும் வடமொழியிற்போலவோ, மேனாட்டார் போலவோ காலங்காலமாக அவற்றைச் சிந்தித்து வாதம் எதிர்வாதமெல்லாம் செய்து விவாதித்து வளர்த்து இலக்கியத்தில் ஏற்றிப் பார்த்து வளர்த்து வந்திலர். அதனால் இன்று பலருக்குத் தொல்காப்பியர் இத்துணையும் சொல்லியுள்ளாரா? தொல்காப்பியர் பரதர், அரிஸ்டாடில் போல ஓர் இலக்கியக் கோட்பாட்டுச் சிந்தனையாளராக விளங்கியிருக்க முடியுமா? இவை தமிழ்ப்பற்றால் இல்லாதவற்றை ஏற்றி உரைப்பனவே! என்ற எண்ணங்கள் தோன்றுகின்றன. தொல்காப்பியக் கல்வி இம்மியளவும் இல்லாதார், வாய்க்குவந்தன பேசுவதில் வியப்பில்லை. தொல்காப்பியத்தை ஓரளவு கற்றவர்களும் தம் தாழ்வுமனப்பான்மையாலும் ஒருவித வேறுபாடுடைய மனவுணர்விலேயே பழகிவிட்டதாலும் இவற்றை ஏற்க மறுக்கின்றனர். சூரிய ஒளியைத் தம் சிறிய கையால்

மறைக்க முயலும் இவர்கள் தாமே ஒளிபெறுங்காலம் தோன்றியுளது. நோக்குதல் என்பது உட்பொருளோடு பார்த்தல், ஆராய்தல், திறனாய்தல் எனப் பலபொருள்படும். எனவே இலக்கியத்தில் திறன் ஆய்தலே நோக்கெனப்பட்டது. தமிழர்களின் திறனாய்வுமுறை இக்கோட்பாட்டால் வெளிப்படுகிறது. தமிழர்கட்குத் திறனாய்வுக் கலை முழுவதும் புதியது எனக் கூறவந்தவர்கள், இனி இந்நோக்குக் கோட்பாட்டைச் சற்றே நோக்குதல் தகும்.

ஒரு செய்யுளில் - இலக்கியத்தில் ஒரு மாத்திரை, சொல் எதுவும் காரணம் கருதி, பயன் தருமாறு ஆளப்பட்டிருக்க வேண்டும். வேண்டாத ஒரு சொற்கூட வருதல் கூடாது. ஒரு மாத்திரை தொடங்கி என்றதால் அசை, சீர், சொல், தொடர், அடைமொழி, அடி அனைத்துமே, ‘இஃது ஏன் ஆளப்பட்டுளது’ எனக் கேள்வி தருவதற்காக, இந்த நோக்கத்தோடு ஆளப்பட்டுள்ளது’ எனத் தக்க விடை கிடைக்குமாறு ஆளப்படுதல் வேண்டும். ‘அடிநிலைகாறும்’ என்றதால், அடி முழுமையும் - பா முழுவதும் கூட ஒரு பயன் கருதிப் படைக்கப்பட்டதாதல் வேண்டும். நோக்குதற்குக் காரணமான ஒன்று-ஒரு சொல்லோ, அசையோ, சீரோ அமைவதையே ‘நோக்குதற் காரணம்’ என்றார். படிப்பவர் சற்றே நின்று, வியந்து நிதானித்து நோக்கும்படியான திறன் அது. அவை இல்லாதவை கவிதை ஆகாது. ஒவ்வோர் உறுப்பையும் நோக்குவது உறுப்புநோக்கு, இதைச் சீர்நோக்கு, அசைநோக்கு, சொல்நோக்கு எனப் பகுத்து ஆராயலாம் இதில் ‘நோக்கு’ அமைந்துள்ளது என ஓர் உறுப்பைச் சிறப்பாக எடுத்துக்காட்டலாம். நோக்கு அமையுமாறு படைப்போன் யாக்க வேண்டுமெனினும், திறனாய்வோன் நோக்குதற்குக் காரணமான ஒன்று அதிலமையவேண்டுமென்று, திறனாலி மேல் வைத்தே சூத்திரம் ஆத்துள்ளார். இது கருதியே இது தமிழர்கள் கண்ட திறனாய்வு எனக் ஆராயப்படுகின்றது.

**இளம்பூரணர்**

இளம்பூரணர் ‘நோக்குதற்காரணம்’ – ‘நோக்குதலாகிய கருவி’ என்று உரையெழுதியுள்ளார். “யாதானும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிதுநோக்காது அது தன்னையே நோக்கி நிற்கும் நிலை” என அவர் விளக்குகின்றார். இதனை ஒரு கருத்துமரபாகவே கொள்ள வேண்டும். இவ் விளக்கம் காப்பியமனைய நெடும் பாடல்களிலும் சிறுபாடல்களிலும் அமையும் கருத்துக் கட்டமைப்பைப் பற்றியதாயுள்ளது. இதன் விளக்கங்கள் தனித்தன்மையுடையன.

**பேராசிரியர்**

பேராசிரியர் தொல்காப்பியம் தோன்றிய காலந்தொட்டுக் கூறப்பட்டு வந்த கருத்து மரபுகளில், இளம்பூரணரது அல்லாத பிறிதொரு வழியைச் சார்ந்தவர். இலக்கியத்தில் நோக்கி உணரப்படுவதொன்றின்றி, வெள்ளைமையாய் வெற்றெனத் தொடுப்பன இலக்கியமாகா. ‘அவ்வாறின்றி நோக்கென்பதோர் உறுப்புப் பெற்றால்தான்’ அது கவிதையாகும்; இலக்கியப்படைப்பாகும்.

செய்யுளில் நோக்கு அமையாதது இலக்கியமாகாது என்று தொல்காப்பியர்; கருதுவதைப் பேராசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார். “இதன் பொருள் மாத்திரையும் எழுத்தும் அசைநிலையும் சீரும் முதலாக அடி நிரம்புந் துணையும் நோக்குடையவாகச் செய்தல் வன்மையால் பெறப்படுவது நோக்கென்னும் உறுப்பாவது” என்ற பேராசிரிய விளக்கம் மிகச்சிறப்பானது. செய்தல் வன்மையால் - படைத்தல் திறனால் உருவானது இது. மாத்திரை, எழுத்து முதலாயின தனித்தனியே பயனுடையவையாயும் ஒன்றற்கு ஒன்று இயைபுடையவையாயும் அமைதலை இது விளக்குகிறது. திருக்குறளை ஓரிடத்தில் ஒரு சொல்லைக் கூட மாற்ற முடியாது என்று கூறுகிறோமல்லவா? அதுவே நோக்கெனப்படுவது. கம்பரில் ஓசைச்சந்தமே பாடற்கருத்தை உணர்த்துமாறு மாறிமாறி அமைவதை நோக்கி, உணர்ந்து பாராட்டுகிறோமல்லவா? அதுவே ‘ஓசைநோக்காக’ ஆகிறது. மேலும் பேராசிரியர் தரும் விளக்கங்கள சில கருதத்தக்கன.

‘கேட்டார் மறித்து நோக்கிப் பயன்கொள்ளும் கருவியை நோக்குதற் காரணம் என்றார்’. ‘அடிநிலைகாறும் என்பது ஓரடிக்கண்ணேயன்றியும் செய்யுள்வந்த அடி எத்துணையாயினும் அவை முடிகாறும் என்றவாறு’ ‘பாட்டின் ஓசை முதலியன எல்லாம் கேட்டோரை மீட்டும் தன்னை நோக்கி நோக்கப் பயன்கொள நிற்கும் கருவி’. ‘அடிநிலைகாறும் என்றதனால் செய்யுள் முழுவதும் எவ்வகை உறுப்பும் கூட்டிநோக்கி உணர்தல் வேண்டும்’ மறித்து நோக்குதல் - திரும்பத்திரும்ப ‘ஏன்ஏன்?’ என வினவி, விடைதேடி ஆராய்தல் - திறனாய்தல். கேட்டோர் நோக்கிப் பயன்கொள வேண்டும்; பயன்கொள்ளுமாறு படைக்கப்பட வேண்டும். ‘முல்லை வைந்துனை’? என்று தொடங்கும் அகநானூற்றுப் பாடலை (அகம் - 4) எடுத்துக்காட்டி, அதில் அடைமொழி முதலான உறுப்பனைத்தும் காரணம் கருதி அமைக்கப் பட்டிருப்பதை விளக்கி, அதனால் இலக்கியச் சுவையாம் பயன்கோடல் முறையையும் பேராசிரியர் விரிவாக விளக்கியுள்ளார்.

**நச்சினார்க்கினியர்**

செய்யுளியல் முதல் சூத்திரத்தில் ‘நோக்கு’ என்பதை ‘மாத்திரை முதலிய உறுப்புக்களையும் உடைத்தாய்க் கேட்டார்க்கு நோக்குப்படச் செய்தலை. நோக்குதல் - பயன்;கோடல்’ என்று நச்சினார்க்கினியர் கூறுவதால் வாசகர் நோக்கு என்பது தெளிவாகிறது. தம் உரையிலும் இதையே வற்புறுத்தியுள்ளார். ‘மாத்திரை முதலிய உறுப்பு கொண்ட அடி நிரம்புந்துணையும் கேட்டார் மீண்டு நோக்கப் பயன்கோடலை உடையவாகச் செய்யுங் கருவியை நோக்கு என்று பெயர் கூறப்படும்’ என அவருடைய உரை கூறுகிறது. மேலும் இவர், பேராசிரியர் கருத்தையே பின்பற்றிக் கூறியுள்ளார்.

**தொல்காப்பியர் நோக்குக் கோட்பாடும், குறிஞ்சிக்கலியும்**

சங்க அகப்பாடல்கள் முழுமைக்கும் கூற்றுகளின் அடிப்படையிலேயே அதன் பாடுபொருள் அமைகிறது. இக்கூற்றுமுறை அகமாந்தர்களான தலைவன், தலைவி, தோழி

மற்றும் இவர்களுடன் தொடர்பு கொண்ட பிற மாந்தர்கள் ஆகியோரிடையே நடைபெறும் நிகழ்வாகும். கூற்றுமுறை அமைப்புகளைப் பொறுத்தவரை ஒருவர் மற்றொருவரிடம் கூறுவதாகவும், ஒருவர் கூற அதனைக் கேட்கும் மற்றொருவர் மறுமொழி கூறுவதாகவும், இருவருக்கும் மேற்பட்டோரால் நடத்தப்படுவதாகவும், தானாகவே கூற்று நிகழ்த்துவதாகவும் அமைகின்றன. இலக்கிய மாந்தர்களிடையே நிகழும் கூற்றுமுறை என்பது அக்கால கட்டத்தில் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இருந்தமையைக் காணமுடிகிறது. அவ்வாறாக தொல்காப்பியரின் நோக்குக் கோட்பாட்டினை சங்க இலக்கிய நூலான கலித்தொகை குறிஞ்சிக்கலியில் தலைவிக் கூற்றின் வழிவாக எடுத்துரைக்கப்படுகின்றது.

**குறிஞ்சிக்கலித் தலைவி கூற்றில் நோக்கு**

'புகா அக் காலைப் புக்கு எதிர்பட்டுழி, பகாஅ விருந்தின் பகுதிக்கண் தலைவி தோழிக்குக் கூறியது' என்பது இப்பாடலுக்கு உரிய கூற்று. அதாவது. தலைவன் தான் புகுவதற்குத் தகுதி இல்லாத காலத்துக்கண் தலைவியின் வீட்டிற்குச் சென்று தலைவியை எதிர்ப்பட்ட இடத்து, அவரால் விலக்கப்படாத விருந்தினனாக ஆகிய வழியும் தலைவிக்குக் கூற்று நிகழும். அத்தகையதொரு நிகழ்ச்சியைத் தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

**'சுடர்த்தொடீஇ! கேளாய்! – தெருவில் நாம் ஆடும்**
**மணற்சிற்றில் காலின் சிதையா, அடைச்சிய**
**கோதை பரிந்து வரிப்பந்து கொண்டு ஓடி,**
**நோதக்க செய்யும் சிறுபட்டி, மேல் ஓர்நாள்**
**அன்னையும் யானும் இருந்தேமா, இல்லிரே!**
**'உண்ணுநீர் வேட்டேன்' என வந்தாற்கு, அன்னை**
**'அடர்பொற் சிரகத்தால் வாக்கி, சுடரிழாய்!**
**உண்ணுநீர் ஊட்டிவா' என்றாள்: என, யானும்**
**தன்னை அறியாது சென்றேன்: மற்ற என்னை**
**வளைமுன் கைபற்றி நலிய, தெருமந்திட்டு**
**'அன்னாய்! இவன்ஒருவன் செய்ததுகாண்'என்றேனா,**
**அன்னை அலறிப் படர்தர, தன்னையான்**
**'உண்ணுநீர் விக்கினான்' என்றேனா, அன்னையும்**
**தன்னைப் புறம்பழித்து நீவ, மற்று என்னைக்**
**கடைக்கண்ணால் கொல்வான்போல் நோக்கி**
**நகைக்கூட்டம் செய்தான்அக் கள்வன் மகன்"** (குறிஞ்சிக்கலி, பா.51)

இப்பாடலின் மையக் கருத்து **"புணர்தல்"** என்ற உரிப்பொருளைக் கொண்டுள்ளது. இப்புணர்தல் என்ற அடிக்கருத்திற்கு பல நிகழ்வுகள் துணைபுரிவதாக அமைகின்றன.

தலைவனும் தலைவியும் களவொழுக்கம் பூண்டு ஒழுகும் நாளில் பகற்பொழுதிலோ, இரவுப் பொழுதிலோ சந்திப்;பது வழக்கம். அவ்விரு குறியிலும் தலைவியைச் சந்திக்க இயலாதவிடத்து, தலைவியைக் காணும் வேட்கையில் தலைவியின் இல்லத்திற்கே சென்று விடுகிறான், தலைவன். அதன் பிறகு நடந்ததையெல்லாம் தலைவி தன் தோழியிடம் நாடகப் பாங்கில் எடுத்துக் கூறுவது போல் அமைந்துள்ளது இப்பாடல். 'ஒளி வீசும் வளையல்களை அணிந்தவளே! ஒரு செய்தி சொல்கிறேன், கேள். தெருவில் நாம் கட்டி விளையாடும் மணல் வீட்டைக் காலால் எற்றி அழித்து, தலையில் அணிந்த பூமாலையை இழுத்து அறுத்து, சித்திரம் எழுதிய நமது பந்தைப் பறித்துக் கொண்டு ஓடி இவ்வாறெல்லாம் நாம் வருந்தும்படி வன்மை செய்யும் அந்தச் சிறுபட்டி, அன்று ஒருநாள் நானும் அன்னையும் வீட்டில் இருந்த பொழுது, வந்து, வாயிலில் நின்று, 'இல்லுள்ளீரே நான் வேட்கை கொண்டேன்' என்று கூறினான். அன்னை பொற்செம்பில் நீர் ஊற்றி 'அவனுக்குக் கொடுத்துப் பருகச் செய்க' என்றாள். வந்தவன் அந்தப் பட்டிதான் என்று அறியாமல், தண்ணீர் கொண்டு சென்றேன். அவன் என் கையை, வளைகளோடு சேர்த்து இறுகப் பிடித்து இழுத்தான். யான் திடுக்குற்று அஞ்சி, 'அம்மா! இவன் செய்த செயலைப் பார்' என்று கூவினேன். அன்னையும் அலறிக் கொண்டு ஓடி வர, யான் நடந்ததை மறைத்து. ஷதண்ணீர் பருகியபோது விக்கினான்' என்றேன். அன்னை அதை நம்பி, அவனது முதுகை அழுத்தித் தடவி விட்டாள். அவன் அறியாமல், அந்தக் கள்ளன் கடைக்கண்ணால் என்னைக் கொன்று விடுபவனைப் போலப் பார்த்துச் சிரித்தான்' என்பது இப்பாடலின் பொருள்.

'சுடர்த்தொடீஇ கேளாய்!' என்று தோழி அணிந்திருக்கும் வளையல்களின் நலத்தினை பாராட்டித்; தொடங்கி இருக்கும் பாங்கு தலைவியின் அறிவுக் கூர்மையைப் புலப்படுத்துகிறது. நம்முன் நிற்பவரைப் பாராட்டுவது என்பது அவர்தம் கவனத்தை நம் பக்கம் திருப்புவதற்கே. மேலும் சுடர்தொடீஇ என்று அமையும் அளபெடை, தோழியை விளித்து அழைப்பதை உணர்த்துகிறது ஷசுடர்த்தொடீஇ! கேள்' எனத் தோழியை விளித்து அவள் கூறும் செய்திகள் ஒரு நாடகக் காட்சி போல் விரிகின்றன. தலைவி முதலில் தலைவனைத் தோழிக்கு அறிமுகப்படுத்துகிறாள். தாம் இருவரும் சிற்றில் இளைத்து விளையாடும் போது, அச்சிற்றிலை சிதைப்பவன் என்றும், கூந்தலில் சூடிய மாலையை அறுத்துக்கொண்டு ஓடுபவன் என்றும், விரிபந்தை எடுத்துக் கொண்டு செல்பவன் என்றும் படிப்படியாகத் தலைவி கூறும் செய்திகள் மெல்ல மெல்ல, குறும்புத்தனம் நிறைந்த விளையாட்டுச் சிறுவனை அவள் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் முயற்சி ஆகும். இதனால் தலைவி, தோழி, தலைவன் ஆகிய மூவரும் சிறு வயது முதல் - விளையாட்டுப் பருவம் முதல் - ஒருவரையொருவர் நன்கு அறிந்தவர் என்பதை விளக்கி நிற்கிறது. சிற்றில் இழைப்பது மகளிர் இயல்பு, இச்சிற்றிலை சிதைத்து விட்டு ஓடுவது ஆடவருடைய இயல்பு, இதுவே பின்னால் பெண்பாற்பிள்ளைத் தமிழிலும், ஆண்பாற் பிள்ளைத்தமிழிலும் இடம்பெற்றது என்பது நாம் கண்டோம்.

‘சிறுபட்டி’ என்றும், ‘கள்வன் மகன்’ என்றும் தம் உள்ளங்கவர் காதலனைப் பற்றித் தலைவி குறிப்பிடுவது ‘தீராத விளையாட்டுப் பிள்ளை’யாக – தான் விரும்பியவாறு எல்லாம் - நடக்கும் ஓர் இளைஞனை நம் மனக்கண் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றது. தலைவன் தலைவியைச் சந்திக்க அவள் வீட்டுக்கு வந்த நேரம் பகலணவு நேரம். அந்நேரத்தில் யாரேனும் வந்தால், அவர்களுக்கும் உணவு வழங்கி உபசரிப்பது அக்கால மக்களின் வழக்கம், ஷஉண்ணுநீர் வேட்டன்’ - தாகமாக இருக்கிறது தண்ணீர் கொடுங்கள் என்று கேட்டு வருகிறான் தலைவன், ஷதவித்த வாய்க்குத் தண்ணீர் கொடு’ என்பது தமிழ் மரபு. ‘அடர்பொன் சிரகத்தால் வாக்கி சுடரிழாய்! உண்ணுநீர் ஊட்டி வா’ என்று அன்னை கூறுவது அவளது விருந்தோம்பற் பண்பினை எடுத்துக்காட்டுகிறது. சுடர்த்தொடீ, சுடரிழாய், அடற்பொற் சிகரம் (தங்கத்தினாலாகிய செம்பு) என்று சொற்கள் தலைவியின் செல்வ நிலையை – உயர்குடும்பத்துப் பெண் என்பதை உணர்த்துகின்றது.

‘உண்ணுநீர் வேட்டேன்’ என்று கேட்டவன் யார் என்பதை அறியாமல் நீர் கொண்டு செல்கிறாள் தலைவி என்பதை **‘யானும் தன்னை அறியாது சென்றேன்’** என்னும் அடி விளக்குகிறது. வந்திருப்பது தான் தான் - அவளுடைய உரிமைக்குரிய தலைவன் தான் - என்பதை உணர்த்தத் தலைவியின் வளைக்கைகளைப் பிடிக்கிறான் அவள், திடீரென்று தன் கையைப் பற்றுகிறானே என்ற அச்சத்தால், ‘அன்னாய்இவன் ஒருவன் செய்தது காண்| என்று அலறிக் கொண்டே அவளைப் பார்க்கிறாள் தலைவி. மகளின் குரலைக் கேட்ட தாயும், ‘என்ன என்ன’ என்று கேட்டுக் கொண்டே உடனே வெளியே வரத் தொடங்குகிறாள். இந்நிலையை எப்படி சமாளிப்பது? நெருக்கடியான சூழ்நிலையில் சமாளிக்கும் திறன் கொண்டவள் தலைவி என்பதை, **‘உண்ணுநீர் விக்கினான்’** என்று கூறும் அவள் சொற்கள் உணர்த்துகின்றன. உண்மையிலே விக்கல் ஏற்பட்டதாகக் கருதி, தலைவனின் மார்பையும் முதுகையும் அழுத்தித் தடவுகிறாள் தாய். இந்நிலையில் தாயின் பின்னால் தலையை நீட்டி ‘கடைக்கண்ணால் கொல்வான் போல் நோக்கி நகைக்கூட்டம் செய்தான் அக்கள்வன் மகன்’ என்று தலைவி கூறுவது அழகான ஓவியமாகத் தீட்டத் தகுந்த அருமையான காதல் காட்சியை இங்கு காணமுடிகின்றது. கபிலனின் குறிஞ்சிக் கலியிலோ கடைக்கண்ணால் ஷகொல்வான் போல்’ நோக்குகிறான் காதலன். காண்பது தான் கண்ணின் தொழில், ‘கொல்வான் போல் கடைக்கண்ணால் நோக்கினான்’ என்பது,

**“உண்டற் குரிய அல்லாப் பொருளை**

**உண்டன போலக் கூறுதலும் மரபே” (தொல்.பொருளியல் நூ.17)**

என்னும் தொல்காப்பிய மரபை உணர்த்துகிறது.

முத்தாய்ப்பாக, ‘நகைக்கூட்டம் செய்தான் அக் கள்வன் மகன்’ என்று முடிக்கிறாள் தலைவி. உலக வழக்கில் குழந்தையையோ குறும்பு செய்பவனையோ ‘திருட்டுப் பயல்’ என்று செல்லமாகக் குறிப்பிடுவார்களே, அதுபோல ‘கள்வன் மகன்’ என்கிறாள் தலைவி. ‘உண்ணுநீர்

வேட்டேன்' எனக் கூறி வந்தாலும், தலைவனது வேட்கை தலைவியைக் காண்பது தான் என்பதை உணர்த்துகிறது. அதுபோல், 'சிறு பட்டி' என்றும் (குறும்புக்காரப் பயல் என்றும் உலக வழக்கில் கூறுவது போல) 'கள்வன் மகன்' என்றும் தலைவனைக் கூறினாலும் தலைவியின் மனம் அத்தலைவன்பால் அவாவி நிற்கிறது என்பதையும் உணர்த்துகிறது.

**"அறத்தொடு நிற்கும் காலத் தன்றி**

**அறத்தியல் மரபிலள் தோழி என்ப" (தொல்.பொருளியல்.நூ.12)**

என்று தொல்காப்பியர் கூறுவதற்கேற்ப, பகட்குறியிலும், இரவுக் குறியிலும் தலைவனைச் சந்திக்க இயலாத சூழ்நிலை ஏற்படும் பொழுது, தலைவி, தோழியின் உதவியை நாடும் வகையில், அறத்தொடு நின்று தன் காதலைத் தோழிக்குப் புலப்படுத்துவாள். இப்பாடல் அந்நிலையில் தலைவி தோழிக்குத் தன் காதலைப் புலப்படுத்துவதாக – 'அறத்தொடு நிற்றல்' துறையின் முதல் நிலையாக – அமைந்துள்ளது. தலைவியின் களவொழுக்கத்தைத் தோழி அறிந்திருந்தாலும், தலைவி அதை வெளிப்படுத்தும் வரை அதை அறியாதவள் போல நடந்து கொள்ளும் தோழியின் நனிநாகரிகம் - பண்பாடு - இங்கு புலப்படுத்தப்படுகிறது. மேலும் 'அன்னை அலறிப் படர்தர' என்னும் தொடர், தாய் மகள் மீது வைத்திருக்கும் தாயன்பைப் புலப்படுத்துகிறது. தனக்கு வரும் துன்பங்களை எல்லாம் தாங்கிக் கொள்ளும் தாய், தன் குழந்தைகளுக்கு ஏதேனும் ஒரு துன்பம் வந்தால் உடனே வந்து தாங்கித் துயர் தீர்க்க விழைவாள். அதனால்தான் இராமலிங்க வள்ளலார், 'தடித்த ஓர் மகனைத் தாய் அடித்தால் உடன்வந்து உணைப்பாள் தாய். அதுபோல் தாயும் தந்தையுமாக இருக்கின்ற தயாபரனே' என்று இறைவனைக் குறிப்பிடும்பொழுது உடன் அணைப்பாள் தாய் என்று தாயை உவமை காட்டுகிறார்.

ஒரு நாடகக் காட்சி போல் அமைந்துள்ள இப்பாடலில் சுட்டப்படும் கதைமாந்தர்கள் நால்வர். அவர்கள் தலைவி, தோழி, தாய், தலைவன் ஆகியோர். நாடகத் தன்மை என்பதற்கேற்ப, தலைவிக்கம் தாய்க்கும் இடையே நடைபெறும் உரையாடலும், தலைவிக்கும் தோழிக்கும்; இடையே நடைபெறும் உரையாடலு;ககும், இப்பாடலில் அமைந்துள்ளன. மேலும், 'அன்னையும் யானும் இருந்தோமா', 'உண்ண நீர் ஊட்டி வா', 'அன்னாய் இவன் ஒருவன் செய்தது காண்', 'உண்ணுநீர் விக்கினான்', 'சுடர்த்தொடீஇ கேளாய், 'நோதக்க செய்யும் சிறுபட்டி' முதலான தொடர்கள் இப்பாடலில் அமைந்துள்ள உரையாடல் பாங்கினை வெளிப்படுத்துகின்றன. இவ்வாறு நோக்கு என்னும் உறுப்பு பாடலின் முதல் வரி முதல் இறுதி வரி வரை பரவி நின்று ஒரு முழுமையை தலைவன் - தலைவி காதல் என்னும் நாடகத்தை அரங்கேற்றம் செய்வதாக அமைந்துள்ளது என்பதை தலைவியின் கூற்றின் வழி மிக நுட்பமாக அறியமுடிகின்றது.

**முடிவுரை**

இவ்வாறு தொல்காப்பியரின் நோக்குக்கோட்பாட்டிற்கு உரையாசிரியர்களான

இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், வெள்ளைவாரணர், வ.சுப.மாணிக்கம், தமிழண்ணல் போன்றவர்களின் உரை விளக்கத்திலிருந்து கருத்துக்கள் பல அறியமுடிகின்றது. மேலும் 'நோக்கு' என்பது இலக்கியக் கலைச் சொல்லாகக் கருதப்படுகிறது, இலக்கிய நயத்தை மட்டும் சொல்லாது அதன் திறனை வெளிப்படுத்தும் ஒரு திறனாய்வுக் கொள்கையாகவும் நோக்குக் காணப்படுகின்றது. படைப்பாளனின் படைப்புத்திறனை வெளிக்காட்டும் தறனாய்வுக் கலையாக நோக்குக் கோட்பாடு விளங்குகிறது. ஒரு படைப்பு எவ்வாறு படைக்க வேண்டும், பாடலின் கருத்து எவ்வாறு பிறிது நோக்காது மையக்கருத்தை உணர்த்தும் விதமாக அமைய வேண்டும் என்றும், இந்நோக்குக் கோட்பாடு விளக்குகிறது. இவ்வாறு 'நோக்கு' இன்றி நல்படைப்பு அல்லது செவ்வியல் படைப்பு அமையாது நல்ல தரமான இலக்கியப் படைப்புக்களுக்கு இந்நோக்கு கோட்பாடு இன்றியமையாததாக விளங்குகிறது என்பதனை இக்கட்டுரையின் மூலம் அறியமுடிகின்றது.

**துணைநூற்பட்டியல்**

[1] சிவலிங்கனார்.ஆ. *தொல்காப்பியம் உரைவளம்*, பொருளதிகாரம். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலகவளாகம் தரமணி, சென்னை – 600113.

[2] முனைவர் செ.வை.சண்முகம். *பொருளிலக்கணக் கோட்பாடு*. தொல்காப்பியம் தொகுதி – 2, (யாப்பும் நோக்கும்), மெய்யப்பன் பதிப்பகம் 53, புதுத்தெரு, சிதம்பரம் – 608001.

[3] தமிழண்ணல். *சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள்*. மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம் 48, தாளப்ப முதலி தெரு, மதுரை – 625001.

[4] தமிழண்ணல். *தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்*. செல்லப்பா பதிப்பகம், மயூரா வளாகம் 48, தானப்ப முதலி தெரு, மதுரை – 625001.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை.

**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை.

**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை.